# திருப்புடைமருதூர்ப் புராணம்

(உரைநடையில் கதைச் சுருக்கத்துடன்)



பதிப்பாசிரியர்கள்

புலவர். பேராசிரியர். ம.வே.பசுபதி எம்.ஏ.,

புலவர். ஞா. மேகலா எம்.ஏ., எம்.ஃபில்.,

சா. சாய்ராமன்



மகாமகோபாத்தியாய

டாக்டர் உ.வே.சா. நூல் நிலையம்

2, அருண்டேல் கடற்கரைச் சாலை

பெசன்த் நகர், சென்னை - 600 090

2005

# திருப்புடை மருதூர்ப் புராணம்

## (உரைநடையில் கதைச் சுருக்கத்துடன்)



பதிப்பாசிரியர்கள்
புலவர். பேராசிரியர். ம.வே. பசுபதி, எம்.ஏ.,
புலவர். ஞா. மேகலா, எம்.ஏ., எம்.ஃபில்.,
சா. சாய்ராமன்



மகாமகோபாத்தியாய
டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம்
பெசன்த் நகர்,
சென்னை - 600 090

மகாமகோபாத்தியாய
டாக்டர் உ.வே.சாமிநாதையர்
நூல்நிலைய வெளியீட்டு வரிசை எண்: 190
முதற்பதிப்பு - 2005

மகாமகோபாத்தியாய
டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம்
பெசன்த் நகர், சென்னை - 90

தமிழ்நாடு அரசு தமிழ்வளர்ச்சித்துறை அரிய நூல்கள் வெளியீட்டுத் திட்டத்தின்கீழ் நிதியுதவி பெற்று வெளியிடப்பெற்றது.

விலை ரூ. 75/-

அச்சும் கட்டும் :
ஜெயராம் பிரஸ்
5, வேலாயுதம் தெரு
நுங்கம்பாக்கம்
சென்னை - 600 034
தொலைபேசி: (044) 28284568
கிளை:
10, நந்திகோவில் தெரு
திருச்சி - 620 002

22778

36/

**JUSTICE S. RATNAVEL PANDIAN**
Judge, Supreme Court (Retd.)
&
Former Chairman,
Fifth Central Pay Commission,
Tel :(044) 26211368, 26269988



Residence L
AB-41, 6th Main Road,
Anna Nagar,
Chennai - 600 040
Tamil Nadu

Date : 08-02-2005

# அணிந்துரை

'சங்கரா சரணம்; மூல
சம்புவே சரணம்; மங்கை
பங்கனே சரணம்; நீற்றுப்
பரமனே சரணம்; நெற்றிச்
செங்கணா சரணம்; எங்கள்
தேவனே சரணம்; செங்கைப்
புங்கவ சரணம்; பூத
நாயக சரணம் போற்றி'

- திருப்புடைமருதூர்ப் புராணம் சதுமுகப்படலம்

தாமிரபரணி நதியின் கீழ்க்கரையில் தெய்வ மணம் கமழும் சிவத்தலம் திருப்புடைமருதூராகும். அங்குத் திருவருள் தரும் கோமதி அம்பாள் உடன் உறை அருள்மிகு நாறும்பூ நாத சுவாமி என்ற புடார்ச்சுனேஸ்வரர் திருக்கோவில் அமைந்துள்ளது.

தலைமருதூர் என்பது ஸ்ரீசைலம். இதை மல்லிகார்ச்சுனம் என்பர். இடைமருதூர் திருவிடைமருதூர். இதை மத்யார்ச்சுனம் என்பர். புடைமருதூர் திருப்புடைமருதூர். இதைப் புடார்ச்சுனம் என்பர். இந்த மூன்று தலங்களிலும் மருதமரம் தலவிருட்சம் ஆகும். இவ்வகையில் இந்தியத்தின் மூன்று சிறந்த சிவத்தலங்களுள் திருப்புடைமருதூரும் ஒன்று என அறியலாம்

திருப்புடைமருதூர்ப் புராணம் அருமையான தமிழிலக்கியம் ஆகும். இது நாள் வரை அச்சில் வராமல் இருந்தது. இப்பொழுது இது அச்சில் வந்து தமிழார்வலர்களின், பக்தர்களின் பயன்பாட்டுக்கு வந்திருப்பதற்காக மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

திருமால், பிரமன், இந்திரன் முதலிய தெய்வங்களும் இங்கு வந்து வரம் பெற்ற செய்திகள் இந்நூலில் சுவையாகச் சொல்லப்பட்டுள்ளன.

இராமனே சீதையைப் பிரிந்தபோது இங்கு வந்து வழிபட்டான் என்றும், பெருமான் 'நீ உன் தேவியைப் பெறுவாய்' என்று வரம் அளித்தான் என்றும்

இந்நூலுள் வருகிறது. வீரமார்த்தாண்டப் படலத்துள் 31 பாடல்களுள் இராமயணக் கதையின் பெரும் பகுதி சுருக்கமாக வந்துள்ளது.

இறைவன் கொடும் பாவங்கள் செய்தவர்களையும் பக்தி தந்து ஆட்கொள்ளும் செய்திகள் பலப்பல இந்நூலில் உள்ளன.

இறைவனைப் 'போற்றி' சொல்லித் துதிப்பதற்கான பாடல்கள் இந்நூலுள் பல உள்ளன. அவற்றைத் தொகுத்து அன்பர்கள் பாராயணம் செய்து பல்வகை நலன்களையும் பெறவேண்டுமென விரும்புகிறேன்.

இந்நூலின் நயங்களையும், சிறப்புகளையும் தமிழறிஞர்கள் நன்கு ஆராய வேண்டும். பக்தர்கள் இந்நூலைக் கற்று நலன்களையும், வளங்களையும் பெற்று வாழ்வாங்கு வாழ வேண்டும்.

இந்த ஆலயத்தின் கோபுர உட்புறச் சுவர்களில் தீட்டப்பட்ட பழம் பெரும் வண்ண ஓவியங்களும், அங்குள்ள மரச் சிற்பங்களும், கற்சிற்பங்களும் சிறந்த கலைப் படைப்புகள்.

மகாமகோபாத்தியாய தாட்சிணாத்திய கலாநிதி டாக்டர் உ.வே.சாமி நாதய்யர் நூல் நிலையக் காப்பாளர் புலவர் பேராசிரியர் திரு.ம.வே.பசுபதி அவர்கள் இந்நூலை ஆராய்ந்து பாடல்களை அனைவரும் உணரும் வகையில் வேண்டிய கதைச்சுருக்கம் முதலியவற்றுடன் மிக அருமையாகப் பதிப்பித்திருக்கிறார்கள். அன்னாருக்கும், பதிப்பாசிரியராகப் பணியாற்றும் திருமதி. ஞா. மேகலா அவர்களுக்கும், உதவிபுரிந்த திரு.ச. சாயிராமன் அவர்களுக்கும், இந்நூல் அந்நூல்நிலையத்தில் இருப்பதை அறிந்து எனக்குப் பெரிதும் உதவிய இலக்கிய நண்பர் திரு.மு.சீனிவாசன் அவர்களுக்கும், மற்றும் உள்ள நூல் நிலையத்தாருக்கும் என் அன்பு கலந்த நன்றி.

தமிழ் உலகம் அவர்கள் எல்லோருக்கும் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

அன்புள்ள

சு. இரத்தினவேல் பாண்டியன்

36/2

# பதிப்புரை

வாழ்க தட்சிண காசி வளம்பதி
தாழ்வி லதாபு டார்ச்சுனம் சார்ந்தருள்
சூழ்இ லேபன சுந்தரன் தொல்கதை
ஏழ்பெ ரும்புவி எங்கும் விளங்கவே

- திருப்புடை மருதூர்ப் புராணம்.

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள பழம்பெரும் சிவத்தலம் திருப்புடை மருதூர்த் திருத்தலமாகும். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றாலும் மிக்க பெருமை கொண்டது இத்தலமாகும். இத்தலத்தின் பெருமைகளை விளக்கும் நூல்கள் பல உள்ளன. திருப்புடைமருதூர்ப் பதிற்றுப்பத்து அந்தாதி, திருப்புடை மருதூர் இரட்டை மணிமாலை, திருப்புடை மருதூர் மும்மணிக் கோவை, திருப்புடை மருதூர்ப் பள்ளு என்பன அவை. இவையெல்லாவற்றிற்கும் மேலாக இலக்கிய வளமும், பக்தி நலமும் செறிந்த திருப்புடை மருதூர்ப் புராணம் என்ற ஒரு நூலும் உள்ளது. அதுவே அச்சு வடிவில் இதுபோது வெளியிடப்பட்டுள்ளது.

இந்திய உச்ச நீதிமன்றத்தில் விளங்கிய நீதியரசர் மாண்பமை. சு.இரத்தினவேல் பாண்டியன் அவர்கள் திருப்புடை மருதூரில் பிறந்தவர். இத்தலத்து இறைவன் பால் ஈர்ப்பு உள்ளவர். திருப்புடை மருதூருக்கும், திருக் கோயிலுக்கும் எண்ணற்ற பொலிவூட்டி வருபவர். திருப்புடை மருதூர்த் திருக்கோயிலின் வரலாற்றுச் சிறப்பையும் சிற்ப ஓவியக்கலை மேம்பாடுகளையும் உலகுணருமாறு செய்து வருபவர். திருப்புடை மருதூரை மையப்படுத்திய தமிழ் இலக்கியச் செல்வங்களையும் தமிழ் கூறும் நல்லுலகில் பரப்ப அவர் வேணவாப் பூண்டுள்ளார். டாக்டர் உ.வே.சா. நூலகத்திற்குப் பன்முறை வருகை புரிந்து திருப்புடை மருதூர்ப் புராண நூலைச் செம்மையாகப் படியெடுத்து அச்சிட வேண்டும் என்ற தம் வேட்கையை வெளிப்படுத்தினார். இப்பதிப்பின் மூல உந்து சக்தியாகவே அவர் விளங்கினார் என்றால் அது மிகையாகாது. அத்துடன் இந்நூலுக்கு அரியதொரு அணிந்துரையும் வழங்கிச் சிறப்பித்துள்ளார். அன்னாரின் நல்உளத்தை வணங்கிப் போற்றி நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலகத்தின் இப் பதிப்புப் பணிக்கு ஊக்கமும் கருத்துரைகளும் வழங்கிய நல்லறிஞர் நற்பணித் தொண்டர் கல்கத்தா திரு. மு. சீனிவாசன் அவர்கட்கு என் இதயம் கனிந்த நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

சென்னை கீழ்ப்பாக்கம் சூரா முனிசாமி செட்டி, புஷ்பாளம்மா சாரிடீஸ் சார்பில் திரு. மு. சீனிவாசன் அவர்கள் வெளிவராத நூலை வெளியிட ரூ.30,000 தொகையை 29.01.2001இல் இந்நூலகத்திற்கு வழங்கினார்.

அத்தொகையில் 'மூவூருலா' வெளியிடப் பெற்றது. அதன் எஞ்சிய தொகை இவ்வெளியீட்டுக்கும் பயன்படுத்திக் கொள்ளப்பட்டது. இவ்வகையில் உதவிய திரு. வீ. சினிவாசன் அவர்கட்கும், அந்நிதி உதவி பெற ஆற்றுப்படுத்திய இந்நூலக ஆட்சிக்குழு உறுப்பினர் மூத்த வழக்குரைஞர் திரு. சி.டி.வி. இராமநாதன் அவர்கட்கும் என் மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ்த் தாத்தா உ.வே.சா. அவர்களின் பதிப்புப் பணி அதே பாணியில், இந்நூல் நிலையம் வாயிலாக, அவர்தம் திருமகனார் திரு.சா.கல்யாண சுந்தரம் ஐயர் அவர்களாலும், டாக்டர் உ.வே.சா. அவர்களின் பெயரனார் திரு க. சுப்பிரமணிய ஐயர் அவர்களாலும், டாக்டர் உ.வே.சா. அவர்களின் கொள்ளுப் பெயரனார் திரு சு. வேங்கட கிருஷ்ணன் அவர்களாலும் தொடர்வது மிகுந்த மகிழ்ச்சிக் குரியதாகும்.

ஆத்திக அன்பர்களும், தமிழார்வலர்களும் இந்நூலைப் பெற்றுக் கற்று, மகிழ்ந்து மகிழ்விக்க எல்லாம் வல்ல பராசக்தியின் பொற் பாதங்களை இறைஞ்சுகிறேன்.

பூவணமும் திருச்சுழியல் பூம்பதியும் குற்றாலப்
பொருப்பும் ஆய
பாவணமார் பதிகளின்தே வாரமு தம்பருகிப்
பாவி யேன்றன்
நாவணமார் தரவிழிகள் திருமேனி தரிசியா
நவைஎன் னேஎன்(று)
ஏவணஞ்சாம் புறுமாலென் புரிவேன்தென் கயிலையுறை
எம்பிரானே.

(டாக்டர் உ.வே.சா. அவர்கள் இயற்றியது)

டாக்டர் உ.வே.சா. நூல் நிலையம்,
பெசன்த் நகர்,
சென்னை - 90

ம.வே.பசுபதி
காப்பாட்சியர்

# முன்னே பின்னே

குறிப்பு: அடைப்புக் குறிக்குள் உள்ள எண்கள் கதைப் பகுதிகளாக உள்ள படலங்களின் எண்கள்.

# ஆராய்ச்சியாளர்க்குஓர் அறிமுகம்

**தலபுராணம் :**

தலபுராண இலக்கியங்கள் திருக்கோயில்களின் பெருமைகளை விளக்கும் இலக்கியங்கள் ஆகும். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றின் சிறப்பு களையும் தலபுராணங்கள் விரிவாகச் சொல்லும். இவ்வகை நூல்களை மான்மியம், என்பர்

இறைவனின் அருள் விளையாடல்களை - அடியவர்களின் வரலாறு களைக் கூறும் இலக்கியங்களும் புராண இலக்கியங்களே ஆகும். இறைவன் அருள் விளையாடல்களைக் கூறும் நூல்களை 'லீலை' எனச் சொல்வார்கள்.

பெருங்காப்பிய நூல்களுக்குரிய பல அமைதிகளும் மேற்கூறிய வகைப் புராணங்களுக்கும் உரியனவாகும். எனவே இவற்றைக் காப்பிய இலக்கியங்கள் என்று கூறுவது பொருந்தும்.

**திருப்புடை மருதூர்ப் புராணம் :**

திருப்புடை மருதூர் என்னும் சிவத்தலத்தைப் பற்றி எழுந்த அரிய தலபுராணம். 1832 பாடல்களைக் கொண்டதாகும். முதல் ஏழு தலைப்புகள் பொதுவானவை. எட்டாம் படலமாகிய நடம்புரி படலத்திலிருந்து ஒவ்வொரு படலமும் ஒன்றும், இரண்டுமான கதைப் போக்குகளைக் கொண்டது. 21 படலங்களைக் கதை அமைப்புடைய படலங்கள் எனக் குறிப்பிடலாம். பல்வகை விருத்தப் பாக்களால் அமைந்த நூலாக இந்நூல் விளங்குகிறது.

**நூலாசிரியர்:**

இந்நூலாசிரியின் பெயர் தெரியவில்லை. எனினும் இந்நூலின் பாயிரத்தை ஒட்டி, குரு வணக்கப் பாடல் ஒன்று உள்ளது. அப்பாடலால் இந்நூலாசிரியரின் குருநாதர் கச்சி சதாசிவ முனிவர் என அறிய முடிகிறது. அவர் குரங்கணில் முட்டப் புராணம் இயற்றியவர் ஆவார். அந்நூலின் பாயிரம் 19 ஆம் செய்யுளில் கச்சிவாழ் சதாசிவ முனி என நூலாசிரியர் பெயர் உள்ளது. பாயிரம் செய்யுள் 16இல் 'நித்திய நின்மலஞானப் பிரகாச தேசிகர் தாள் நினைந்து வாழ்வாம்' எனக் குருவணக்கம் கூறப்பட்டுள்ளது. இதனால் கச்சி சதாசிவ முனிவரின் குரு கச்சி ஞானப்பிரகாசர் என அறியலாம்.

காஞ்சி தொண்டை மண்டல ஆதீன வரலாற்றை நன்கு ஆய்ந்து பார்த்தால் இந்நூலாசிரியர் பெயரைக் கண்டு கொள்ள வாய்ப்புண்டு.

**திருப்புடை மருதூர்ச் சருக்கம் :**

திருநெல்வேலித் தலபுராணம் என்பது நெல்லையப்பப் பிள்ளையவர்கள் செய்ததாகும். அதில் 27 ஆவது சருக்கம் திருப்புடை மருதூர்ச் சருக்கம் என்பதாகும். அச்சருக்கத்தில் விருத்திராசுரனை வதைத்த செய்தி கூறப் பட்டுள்ளது. திருப்புடை மருதூர்ப்புராணத்தில் நடம்புரி படலத்திற்கு அடுத்த படலம் விருத்திராசுரப் படலமாகும்.

நெல்லையப்பப் பிள்ளையவர்கள் இயற்றிய திருநெல்வேலித் தல புராணம் 19ஆம் நூற்றாண்டு இலக்கியமாகும். திருப்புடை மருதூர்ப் புராணத்தின் விருத்திராசுரவதைப் படலத்தின் விரிவாகவே திருநெல்வேலித் தல புராணத்தின் புடை மருதூர்ச் சருக்கம் எழுந்தது எனலாம். இவ்வகை யினால் திருப்புடை மருதூர்ப் புராணம் 18-ஆம் நூற்றாண்டின் இலக்கிய மாகும் எனக் கருத இடமுண்டு.

# கதைப்பகுதிகளான படலங்களின் செய்திச் சுருக்கம்

## 1. நடம்புரி படலம்

ஆதியில் திருக்கயிலையில் தைப்பூச நன்னாளில் 'இறைவனே உனது திரு நடனக் காட்சியை எங்களுக்கு அருள வேண்டும்' என்று திருமால், பிரமன் முதலியோர் சிவபெருமானிடம் வேண்டினர். சிவபெருமானும் திருப்புடை மருதூரில் தைப்பூசத் திருநாளில் அவர்களுக்குத் தனது திருநடனக் காட்சியை வழங்கி அருள் செய்தமையால் திருப்புடை மருதூர் தென்கயிலை என்றும் சிறப்பிக்கப் பெற்றது. இத்தலம் காசியைப் போன்று முத்தி தரும் திருத்தலம் ஆகும். எனவே திருப்புடை மருதூர், தென்காசி என்னும் பொருளில் 'தட்சிண காசி' என்றும் புடை மருதக்காசி என்றும் வழங்கப்படுகிறது.

பிரமனுடைய புதல்வராகிய காசிபனுக்குத் திதி, அதிதி என்னும் பெயர் பெற்ற மனைவியர் இருவர் இருந்தனர். அவர்கள் இருவரில் திதி என்பவளுக்கு அசுரரும், அதிதி என்பவளுக்குத் தேவர்களும் புதல்வராகப் பிறந்தனர். எனவே தாயாதிப் போரால் தேவர்கள் அசுரரை மாய்த்தனர். தம் மக்களாகிய அசுரர்களை இழந்தமையால் வருந்திய திதி அசுர குருவாகிய சுக்கிரனிடம் முறையிட்டாள். சுக்கிரன் திதிக்கு உரைத்தவாறு காசிபனும் அதிதியும் சேர்ந்து இயற்றும் வேள்வியின் வளர்ச்சியாக விருத்திராசுரன் அவ்வேள்வியில் உச்சரிக்கப்படும் மந்திர ஒலிபேதத்தால் அவ்வேள்வித் தீயில் இருந்து தோன்றினான். யக்ஞம் ஆகிய வேள்வித் தீயில் இருந்து தோன்றியதால் விருந்திராசுரனுக்கு யக்ஞயோனி என்னும் பெயர் ஏற்பட்டது. தனது தந்தையாகிய காசிப முனிவன் உபதேசப்படி யக்ஞயோனி பிரமனைக் குறித்துக் கடுந்தவம் இயற்றினான். அவனது கடுந்தவத்தைப் பாராட்டி மனம் இரங்கிய நான்முகன் யக்ஞயோனி விரும்பியவாறே அவனுக்கு எத்தகைய ஆயுதங்களாலும் மரணம் நேராதவாறு வரம் அளித்து அருளினான். உடனே யக்ஞயோனி தேவர்களுடன் போரிட்டு அவர்தமை வென்று வான் உலகைக் கைப்பற்றி அதனை ஆண்டுவரலானான்.

விருத்திராசுரனால் வான் உலக ஆட்சியை இழந்த இந்திரன் தேவர்களுடன் நான்முகனை நாடிச் சென்று விருத்திராசுரனால் தேவர்களுக்கும், தனக்கும் ஏற்பட்ட இன்னல்களைப் பிரமனிடம் கூறி மீண்டும் 'வான் உலகைத் தான் பெறுவதற்கு அருள் செய்வாய், என வேண்டினான். நான்முகன் வேள்வியில் சொல்லப்பட்ட மந்திர ஒலிபேதத்தால் விருத்திராசுரனுக்கு அழிவு நேரிடும் என்றும்

விருத்திராசுரனுக்கு இந்திரன் செய்த போரில் அவனுடைய வச்சிராயுதம் கூர்மழுங்கி விட்டது என்றும், வேறொரு புதிய வச்சிராயுதத்தை வழங்க வல்லவர் மேருமலையில் தவம் செய்கின்ற ததீசிமா முனிவனே என்றும் அம்முனிவனது முதுகு எலும்பே அவ்வச்சிராயுதம் ஆகும் என்றும், அதனை இந்திரன் அம்முனிவரிடம் வேண்டிப் பெற வேண்டும் என்றும் கூறினான். நான்முகன் உரைத்தபடியே இந்திரன் மேருமலையில் தவம் செய்கின்ற ததீசிமா முனிவரை அடைந்து அவர் தமது முதுகு எலும்பைத் தந்தருள வேண்டும் என்று வேண்டினான்.

ததீசிமா முனிவரும் யோகத்தால் தாம் உயிர் நீங்குவதாகவும் அதன் பின் தமது முதுகு எலும்பை இந்திரன் பெறலாம் என்றும் அருளினார். இந்திரனும் அவ்வாறே ததீசிமா முனிவரின் முதுகு எலும்பைப் பெற்று, தேவகம்மியன் கையில் கொடுத்தான். தேவகம்மியனும் அதனைத் திருத்தி வச்சிராயுதமாகச் செய்து இந்திரனிடம் கொடுத்தான். தவச்செல்வராகிய ததீசி முனிவரின் முதுகு எலும்பினால் அமைக்கப்பெற்ற அவ்வச்சிராயுதத்தின் மகிமை பொருந்திய வலிமையால் இந்திரன் விருத்திராசுரனைக் கொன்று தனக்குரிய வானுலக ஆட்சிப் பீடத்தை மறுபடியும் பெற்று மகிழ்ந்தான்.

அந்தணராகிய காசிப முனிவரின் புதல்வனாக வேள்வியில் தோன்றிமையால் விருத்திராசுரனைக் கொன்ற பிரமகத்தி இந்திரனைப் பற்றிக் கொண்டு அவனை மிகவும் துன்புறுத்தியது. தேவர்கள் ஒருங்கே கூடி தேவ குருவாகியவியாழ பகவானிடம் அந்தப் பிரமக்கதியால் இந்திரன் அடைகின்ற இன்னல்களைக் கூறி அவற்றைப் போக்கி இந்திரனுக்கு அருள வேண்டும் என்றனர். அது கேட்டு வியாழபகவான் இந்திரனை நோக்கித் திருப்புடை மருதூரில் சிவ சொரூபமாகிய மருதமரத்தில் ஒன்றிச் சிவ பெருமானைக் குறித்துத்தவம் செய்வாய் என்று கூறினார். வியாழபகவான் உரைத்தவாறே இந்திரனும் திருப்புடை மருதூரை அடைந்து மருதமரமாக இருந்து அத்தலத் தில் தவம் புரியலானான்.

## 2. விருத்திராசுரன் வதைப் படலம்

விருத்திராசுரன் என்ற ஓர் அசுரன் இருந்தான். அவன் வேள்விகள் பல செய்து பல வரங்கள் பெற்றிருந்தான். அந்த வரத்தினால் பல தவறுகள் செய்தான். அதனால் தேவேந்திரன் அவனை அழித்தான்.

## 3. இந்திரன் பழிதீர்த்த படலம்

இந்திரன் விருத்திராசுரனைக் கொன்ற பாவத்தை நீக்குவதற்காகத் திருப் புடைமருதூரில் மருதமரமாகத் தோன்றினான். இந்திராணியும் அத்தலத்துக்கு வந்தாள். பதியின் நலத்துக்காகப் பல்வேறு விரதங்களை மேற்கொண்டாள்.

இறைவன் எழுந்தருளினான். இந்திரன் தன்னை ஈவாய் என்று அவள் வேண்டிக் கொண்டாள். இந்திரன் சாபம் தீர்ந்து இந்திராணியைச் சேர்கிறான். இந்திரன் திருப்புடை மருதூரை இந்திரபுரிக்கு ஒப்பாக அலங்கரித்தான்.

## 4. சீதரப் படலம்

திருமால் திருப்புடை மருதூர் இறைவனை வணங்கி அருள் பெற்ற செய்தியை இப்படலம் உரைக்கிறது. துவாரகையில் திருமால் சிவலிங்கத்தைத் தாபித்துப் பூசை செய்தார். சிவதீட்சை இல்லாமல் பூசை செய்வது குற்றம் என்று உபமன்னியர் அவருக்கு உணர்த்திச் சிவதீட்சை செய்தார். திருமால் முறைப்படியாகச் சிவபூசை செய்து வந்தார். மதுரா புரியில் எழுந்தருளிச் சிவபூசை செய்த போது சிவன் வெளிப்பட்டான். திருமால் திருநடனக் காட்சி அளிக்க வேண்டும் என்று வேண்டினார். இறைவன் அருளியபடியே ஸ்ரீ தேவியுடன் திருமால் புடை மருதூருக்குச் சென்று தோத்திரம் செய்கின்றார். திருப்புடை மருதூரில் முத்தி அம்பலத்தில் இறைவன் திருமாலுக்குத் தனது திருநடனக் காட்சியைக் காட்டி அருள் செய்கிறான்.

வாமதேவன் என்னும் முனிவர் திருமாலின் திருவடி சேர்வதற்காகத் காசியில் பிரமனை நோக்கித் தவம் செய்தார். பிரமன் திருப்புடை மருதூருக்குச் சென்று தவம் செய்ய உத்தரவிட்டார். அவரும் அவ்வாறே செய்தார். திருப்புடை மருதூரில் சிவபூசையில் இருந்த திருமாலையும் பெருமானையும் தரிசிக்கும் பேறு பெற்றார். இதற்கு இடையில் முனிவர் தவம் செய்யும்போது அவரது தவத்துக்கு ஊறு செய்த ஊவன் என்னும் கந்தர்வனை முதலை ஆகுமாறு சபித்தார். சும்மராசன் என்பவர் யானை ஆகி முதலைதன் கால் பற்ற ஆதி மூலமே என்று கூவினார். திருமால் அவரைக் காத்தார். யானை மீண்டும் திருப்புடை மருதூரில் அரசனாகத் தோன்றியது. இறைவனை வழிபட்டார்.

## 5. ஆதிமனுப் படலம்

ஆதிமனு என்ற அரசன் இத்தலத்துக்கு வந்து அருள் பெற்றதை இப்படலம் விரித்து உரைக்கிறது. ஆதிமனு, குமரிக் கண்டத்தின் அரசன் ஆவான். அவனுக்குப் புதல்வர்கள் இல்லை. அதற்காகக் காசி யாத்திரை செய்தான். இறைவன் அவன் கனவில் தோன்றித் திருப்புடை மருதூரில் அருள் செய்வோம் என்றார் ஆதிமனு பல தலங்களையும் தரிசனம் செய்து கொண்டு திருப்புடை மருதூருக்கு வந்தான். பொருனை நதி சிறு பெண்ணாக வந்து திருப்புடை மருதூரின் பெருமைகளை எல்லாம் ஆதி மனுவுக்குச் சொன்னாள். அச் செய்திகளில் இமய அரசன் வரம் பெற்றது அகத்தியன்

அருள் பெற்றது முதலியனவும் வருகின்றன. அவற்றைக் கேட்டு மகிழ்ந்த ஆதிமனு இறைவனைப் பலவாறு போற்றுகிறான்.

## 6. ஆலயம் காண்படலம்

ஆதிமனு திருப்புடை மருதூரில் சிவபெருமானுக்கு ஆலயம் கட்ட விரும்பினான். அதற்காகச்சிவனை நோக்கித் தவம் இருந்தான். பெருமானும் அருள் செய்தான். மயனை அழைத்து மயன் விதிப்படியாக ஆலயம் கட்டத் தொடங்கினான். பல அதிசயங்கள் நிகழ்ந்தன. மரத்தடியில் இறைவன் இலிங்கத் திருமேனியாகத் தோன்றினான். திருக்கோயிலில் எழுந்தருளிய இறைவன் 'சாரங்கவல்லி' என்றும் தனது தேவியுடன் வந்திருந்த ஆதி மனுவுக்குக் குழந்தைப் பேறு வரம் அருளினான்.

## 7. சதுமுகப் படலம்

நான்முகனாகிய பிரமன் இத்தலத்து இறைவனைப் பூசித்து நன்மை பெற்றதை இப்படலம் கூறுகிறது. இதனைத் தட்சிணகாசி என்ற சிறப்பு இப்படலத்தில் விரித்துரைக்கப் படுகிறது.

நான்முகன் காசியில் தவம் செய்தான். இறைவனும் தேவியும் வெளிபட்டுத் திருப்புடை மருதூருக்குச் சென்று தவவேள்விகள் புரியுமாறு அருளினர். அவ்வாறே பிரமன் இங்கு வந்தான். பலதலங்களையும் தரிசித்து இங்கு வந்தபோதே பிரம்ம தண்டம் நிமிர்ந்தது. தண்டத்தையும் இங்குப் பிரதிஷ்டை செய்தான்.

## 8. பதியத்தி தீர்ந்த படலம்

குலடி என்னும் பெண் கணவனைக் கொன்று செல்வங்களை எல்லாம் எடுத்துக் கொண்டு கள்ளக் காதலனுடன் வேறூருக்குச் சென்றாள். அவள் பதியைக் கொன்றதால் கொலைப் பாவம், பதி அத்தி - சூழ்ந்தது. பேய் பிடித்து அலைந்தாள். செல்வத்தை இழந்தாள். இன்பத்தை இழந்தாள் பிச்சை எடுத்தாள். முதுமை அடைந்தாள்.

திருப்புடை மருதூருக்கு வந்தாள். தாகத்தால் தீர்த்தம் குடித்தாள். அப்பொழுது பொருனையில் வெள்ளம் வந்தது. சிவசிவ என அலறினாள். தீர்த்த விசேடத்தாலும் மந்திர உச்சரிப்பினாலும் இறைவனின் காட்சி கண்டாள். அவள் பாவங்கள் அகன்றன. அவள் வான் எய்தினாள்.

## 9. அவிர்த்தானப் படலம்

அவிர்த்தானன் என்ற பிரமசாரியின் வினை நீக்கிய செய்தியை இப்படலம் கூறுகிறது. அவிர்த்தானன் என்பவரின் குருவின் பெயர் அங்கணன்

என்பதாகும். அங்கணன் ஒருயாகம் செய்யக் கருதினான். அவிர்த்தானனை அதற்கு வேண்டிய பணிகள் செய்யச் சொன்னார். அதற்காக அவிர்த்தானன் காட்டுக்குச் சென்றான், அங்கு ஒரு பெண்ணைக் கண்டு அவள் வற்புறுத்தலால் கூடினான். அதனால் நோயுற்றான். நோய்கள் தீர இறைவழியில் பலவகை முயற்சிகள் செய்தான். திருப்புடை மருதூருக்கு வந்து வழிபட்டுப் பிணிகள் நீங்கிக் குரு உபதேசம் பெற்று இல்லறம் செய்து இறை நெறியில் நடந்தான்.

## 10, வால சதானந்தப் படலம்

வால சதானந்தன் செய்த பிழையை இத்தலத்தில் இறைவன் நீக்கிய செய்தியை இப்படலம் கூறுகிறது. நாரதர் காசியின் பெருமையையும் அதனினும் சிறந்த திருப்புடை மருதின் பெருமையையும் இந்திரனுக்கு உரைத்தார். இந்திரனும் நாரதரும் தேவர்களும் இத்தலத்துக்கு வந்து வழிபாடாற்றினர். யாகங்கள் செய்தனர்.

பிறியமகன் என்ற முனிவர் இந்திர பதவிக்காக மண்ணுலகில் தவம் செய்தார். அவர் தவத்தைக் கெடுக்க ரம்பையை இந்திரன் அனுப்பினான். முனிவர் அவளைத் துய்த்தார். அவர்கட்குப் பிறந்தவனே வாலசதானந்தன். கவுதமனும் அகலிகையும் அவனை வளர்த்தார்கள். அவன் காமப் பிழை செய்ததும் திருப்புடை மருதூரில் பாவம் நீங்கியதும் இங்குக் கூறப்படுகிறது.

## 11. புறமதம் தீர்த்த படலம்

பெண் மயக்கம் காரணமாக வேற்றுமதத்தில் சேர்ந்தவன் இறைவன் அருளால் சைவம் சார்ந்த நிகழ்வை இப்படலம் இயம்புகிறது.

சித்திர சாப மாறன் என்பவன் பாண்டிய மன்னன். அவன் மகன் சுசேடணன். துளுவ நாட்டு மிலேச்ச மன்னன் காஞ்சகன் மகள் காந்தரங்கனி.

பாண்டி இளவரசன் பெண்ணாசையால் மிலேச்சமதத்தைப் பின்பற்றினான். இறைவன் அவனுக்கு வியாதி கொடுத்துத் தடுத்தாட் கொண்டு சிவமதம் சேரச் செய்தார்.

## 12. அலதந்தப் படலம்

முசி என்ற வசுவேந்திரனின் மகன் அலதந்தன். முசி நூறு ஆண்டுகள் இந்திரனுடன் போர் செய்தான். அலதந்தனும் சினமுற்று இந்திரனுடன் போர் செய்தான். முசி தோற்றான். தன் மகனைப் புடை மருதூர்க்குச் சென்று பூசிக்கச் சொன்னான். பூசைக்கு இடையூறு செய்ய இந்திரன் முனைந்தான்.

இறைவன் அதைத்தடுத்து அலதந்தனுக்கு அருள் செய்தான். அலதந்தன் ஞான மார்க்கத்தில் ஈடுபட்டடான்.

## 13. கருவூர்ச் சித்தப் படலம்

கருவூர்ச் சித்தர் அழைப்புக் கிணங்கி இறைவன் சாய்ந்த நிகழ்வு இப்படலத்தில் கூறப்படுகிறது.

மணிகண்டேசன் - திலதைக்கு நூறு பிள்ளைகள் பிறந்தனர். அவர்களில் ஒருவன் சோமபுத்திரன். அவன் செல்வம் மிகப்பெற்று அரசனானான். அவன் பானு மித்திர வேடனின் மகள் தராபதியைக் காதலித்தான். வேடன், தன் மகளுக்கு 'மண்ணில் பிறந்து ஆண்வேட்கை இல்லாமல் போவாய்' எனச் சாபமிட்டான். சோமபுத்திரனுக்கும் 'பெண்ணாசை அற்றவனாக மண்ணில் திரிவாய்' என அவன் தந்தை சாபமிட்டான்.

சோமபுத்திரன் பூதியார் மகனாப் பிறந்தான். கற்பேஸ்வரன் என்பது அவர் பெயர். தராபதி பூதிபூடணன் மகளாப் பிறந்தாள். காதம்பரி என்பது அவள் பெயர். காதம்பரி திருமணத்தை வெறுத்தாள். கற்பேஸ்வரனும் திருமணத்தை வெறுத்தான். கற்பேஸ்வரன் தவம் மேற்கொண்டான். அவன் தவத்துக்கு இரங்கிய இறைவன் அவனின் முற்பிறப்பு வரலாற்றை உணருமாறு செய்தார். திருப்புடை மருதூருக்குச் சென்று தேன் அருந்தி வன்னிக் காயைத் தின்றால் சாபம் நீங்கும் என்றும் அருளினார். அவன் அவ்வாறே செய்ததனால் சித்தரானான். பல சித்துக்கள் செய்தார். இக்கருவூர்ச் சித்தர் அழைக்கவே பெருமான் சாய்ந்த கோலத்தில் காட்சி தந்த அதிசயமும் நிகழ்ந்தது.

## 14. அகத்தியப் படலம்

இமயத்தில் இறைவன் திருமணத்தின் போது தெற்குத் திசையை உயர்த்தப் புறப்பட்ட அகத்தியர் புடார்ச்சுனத்தைத் தரிசிக்க எண்ணி இங்கு வந்து பூசித்த வரலாறு இப்படலத்துள் உள்ளது. சாத்திரச் செய்திகள் ஆகமச் செய்திகள் பூசை முறைகள் பற்றி பல இறைநெறிக் கொள்கைகள் இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

## 15. தாரக உபதேசப் படலம்

சூத முனிவர் இதுவரை திருப்புடை மருதூரின் சிறப்புக்களை எல்லாம் சொன்னார். அதனைக் கேட்ட முனிவர்கள் தாங்களும் திருப்புடை மருதூருக்குச் சென்று இறைவனைத் தரிசிக்க ஆசைப்பட்டார்கள். வாதராயணர், மார்க்கண்டர், மரீசி, வான்மீகர், வசிஷ்டர், சுகர் என்ற ரிஷிகள் சூதரைப் போற்றியவாறு திருப்புடை மருதூர்க்கு வந்தார்கள். இறைவனை

வழிபட்டு மகிழ்ந்து இறைக் காட்சி கண்டார்கள். யோகாதி முனிவர்களுக்கு இறைவனே தாரக மந்திரத்தை உபதேசித்தான்.

இப்பகுதியிலும் இத்தலத்தில் தரிசித்தல், தானம் செய்தல், வேள்வி செய்தல் முதலிய மகிமைகள் கூறப்பெற்றுள்ளன. இங்கு இறந்தவர்களுக்கு இறைவனே தாரக மந்திரம் உபதேசிக்கிறான்.

## 16. வீரமார்த்தாண்டப் படலம்.

இப்பகுதியில் இராமாயண வரலாறு 31 பாடல்களில் வருகிறது. இராமன் சீதையைப் பிரிந்தபின் தம்பியொடு இத்தலத்து இறைவனை வழிபட்டார். இறைவன் 'சீதையைச் சேர்வாய்' என்று வரம் அருளினார்.

வீரமார்த்தாண்டன் என்னும் மன்னனின் கனவில் இறைவனே எழுந்தருளி இத்தலச் சிறப்புகளைக் கூறி, தலத்தை இனம் காட்டியருளினர். அரசன் இத்தலத்திற்கு வந்து திருப்பணிகளும் யாகங்களும் செய்தான். இறைவன் காட்சி தந்தார்.

## 17. தாம்பிர வன்னிப் படலம்

பொருனை நதியின் பெருமையை இப்படலம் கூறுகிறது. பாரதத்தின் தீர்த்தங்களின் பெயர்கள் மிகப்பல இப்பகுதியில் கூறப்படுகின்றன. தலப் பெயர்களும் வருகின்றன.

தக்கன் மகளாக உமையம்மை தோன்றுகிறாள். தாட்சாயணி என்பது அவள் பெயர். அவளுக்கும் சிவனுக்கும் திருமணம் நடக்கிறது. அனைவரும் வடக்குக்கு வந்தமையால் வடக்கு, தாழ்கிறது. தெற்கு உயர்கிறது. அகத்தியர் தெற்குக்கு அனுப்பப்படுகிறார். வழியில் அவர் பலதலங்களுக்குச் சென்று இறைவனைத் தரிசிக்கிறார். அவரின் கமண்டலத்தில் பல தீர்த்தங்களும் கலந்தன. அவை யெல்லாம் பொருனையில் கலந்தன.

வருணன் சிவனைக் கயிலையில் தரிசித்தான். 'சர்வ பாவங்களும் தீர்க்கும் தீர்த்தம் எது'? எனக் கேட்டான். சிவன் 'என் தலை மேல் உள்ள கங்கை பகீரதன் தவத்தால் பூலோகத்தில் பாகீரதியாக பூலோக கங்கையாயிற்று. அது அகத்தியன் கமண்டல வழியாகக் காவிரியானது. அவன் கமண்டலத்தில் எஞ்சிய கங்கை நீருடன் பல தீர்த்தங்களும் இணைந்து பொருனை ஆயற்று. 'தம்பிரான் வேணித் தீர்த்தம் (தம்பிரான் - சிவன்) என வழங்கப் பெறுகிறது. செம்பு என்னும் உலோக குணமும் இந்நதிக்கு உண்டு. இது சகல பாவங்களையும் தீர்க்கும்' என்றார்.

இந்திரனும் தாமிர வருணியில் நீராடி அதன் கரையில் யாகம் புரிந்தான்.

## 18. ஆத்திவனப் படலம்

இப்படலத்தில் திருக்கோயில் உருவான புராணச் செய்திகள் கூறப் பெற்றுள்ளன.

மணிக்கிரீபன் என்பவன் யட்சர்குல இளவரசன். அவன் பத்ராடவி என்னும் சோலையில் உலாவிக் கொண்டிருந்தான். கும்பநாதனின் மகள் சித்ரலேகை, லீலாவதி என்னும் தன் தோழியுடன் அச்சோலையைக் காண வந்தாள். சித்ரலேகைக்கும் மணிக்கீரிபனுக்கும் காதல் ஏற்பட்டது. பெற்றோர் இசைவுடன் மணம் செய்து கொள்ள முடிவு செய்தனர்.

தோழி லீலாவதி சோலையில் வழிதவறிப் பிரிந்தாள். சித்ரலேகை போன பின்பு லீலாவதி மணிக்கிரீபனைப் பார்க்கிறாள். அவளும் அவனைக் காதலிக்கிறாள். மணிக்கிரீபன் மறுக்கிறான். ஒருத்தியுடன் கந்தர்வ மணம் கொண்டதைச் சொல்கிறான். லீலாவதி சபிக்கிறாள். 'நீயும் உன் காதலியும் குஷ்டரோகி ஆக வேண்டும்' என்பது அவள் சாபம் மணிக்கிரீபனும் லீலாவதியை 'அப்படியே நீயும் ஆகுக' எனச் சபிக்கிறான்.

சோழனுக்கும் பாண்டியனுக்கும் போர் நடக்கும் போது பாண்டியன் உருகி வேண்டியதால் இறைவன் அவனை வெற்றிபெறச் செய்தான். பாண்டியன் மணல்திட்டாகக் கிடந்த நகரைச் சமன் செய்து கோயிற்பணி செய்தான்; இவ்வூரை மணிக்கிரீப நகர் எனப் பெயரிட்டழைத்தான்.

தொண்டை மண்டல அரசன் அரிய நாயக மன்னனே கணபதி கோயில், திருச்சுற்று, அம்மன் கோயில் முதலிய பல திருப்பணிகள் செய்து ஆபரணங்கள் அளித்துத் திருவிழா ஏற்பாடுகள் செய்தவனாவான்.

## 19. புட்பவனப் படலம்

காஞ்சிபுர மன்னனின் காம வேட்கை காரணமாக மரணமடைந்த சண்பக வல்லி பூவாகத் தோன்றிய வரலாறு இப்பகுதியில் வருகிறது.

சண்பகவல்லியின் கணவன் தம்குல மரபுப்படிக் கப்பலில் சென்று பொருளீட்டக் கருதினான். சண்பகவல்லியின் அண்ணனிடம் சண்பக வல்லியை ஒப்படைத்துச் சென்றான். குறிப்பிட்ட காலத்தில் அவன் வராததால், சண்பக வல்லியைக் காஞ்சி மாநகர் வணிகப் பெருமகனாரிடம் ஒப்படைத்து அவள் அண்ணன் தேடிச் சென்றான்.

சண்பகவல்லி பேரழகி. அவளைப் பற்றி அறிந்த மன்னன் ஆட்களை அனுப்பி அவளைக் கடத்திக் கொண்டு வரச் செய்தான். மன்னனின் காமத்திற்கு இணங்கக் கூடாது என்று சண்பகவல்லி தற்கொலை செய்து கொண்டாள். அதைக் கேட்ட வணிகரும் அவர் மனைவியும் இறந்தனர்.

இந்நிலையில் அவனின் அண்ணனும் கணவரும் வெளிநாட்டிலிருந்து வந்தனர். செய்தி அறிந்து அத்துயரத்தால் அவர்களும் இறந்தனர்.

பெண்கொலைப் பாவம் மன்னனைப் பற்றியது. பல துன்பங்களை அளித்தது. பரிகாரங்கள் பலனளிக்கவில்லை. சண்பக வல்லியின் பிணம் மன்னனின் தலையில் அமர்ந்தது. அச்சம் அவலங்களால் மன்னன் சொல்லொணாத்துயர் அடைந்தான்.

ஸ்ரீகாஞ்சி காமாட்சி மன்னனைத் திருப்புடை மருதூர்க்குச் செல்லப் பணித்தாள். அதுவும் குருநாதரின் உருக்கமான பக்திக்காக.

புடைமருதூர்த் தீர்த்தமாடியதும் அரசனின் தலை மேலிருந்த பிணம் மலராகி நீரில் மிதந்தது. அரனைப் போற்றிப் பல பணிகள் செய்து வேண்ட இறந்த ஐவரும் எழுந்தனர். முத்தி சேர்ந்தனர். துர்க்கையம்மன் செண்பவல்லிக்குப் பொற்சிலை மற்றும் கோயில் பணிகள் செய்யப் பணிக்கப் பலகாலம் தங்கி மன்னன் அப்பணிகள் செய்து மீண்டான்.

## 20. அரிகைப் படலம்

இத்தலத்துக்கு அரிகை எனப் பெயர்வந்த புராணச் செய்தியும், பிறசிறப்புகளும் இப்படலத்தில் கூறப்படுகின்றன.

தேவர்களும் அசுரர்களுமாகச் சேர்ந்து திருப்பாற்கடலைக் கடைந்தார்கள். மகாமேருமலை மத்து; வாசுகிப் பாம்பு கயிறு. வாசுகி விஷம் கக்கியது. இறைவனிடம் முறையிட்டார்கள். இறைவன் விஷத்தைச் சிறு உருண்டையாக்கி உண்டார். அது தொண்டையில் தங்கியது. தொண்டை மணி நீலமாயிற்று. எனவே இறைவன் நீலகண்டன் எனப் பெயர் பெற்றான்.

பரமன் விஷம் அருந்தித் தேவர்களைக் காத்தான், விஷம் புறப்பட்டபோது அவ்வெப்பம் தாக்கிய காங்கை பிரம்ம விஷ்ணுக்களுக்கு நீங்கா இடராக இருந்தது. அதனால் அவர்கள் தல யாத்திரை, தீர்த்த யாத்திரை செய்தார்கள். திருப்புடை மருதூர்க்கு வந்து அம்பிகையைத் தொழுது பன்னெடுங்காலம் சிவப் பணிகள் செய்து விஷக் காங்கை நீங்கப் பெற்று வரம் பல பெற்றார்கள்.

கண்ட கர்ணன் என்பவன் வைணவப் பற்று மிக்கவன். வைணவத் தலங்களுக்கெல்லாம் சென்று வழிபடுவான். பிற சமயங்களை நிந்தனை செய்வான். அவனுக்குப் பூவுலகில் வாழும் காலம் முடிவுற்றது. வைகுந்தம் சென்று திருமாலைத் தரிசித்தான். பிற சமயத்தை நிந்தனை செய்த உன் செயல் பெரும் பாவச் செயல் என்றார் திருமால். 'எச்சமயக் கடவுளையும் நிந்தை செய்வோர்க்கு நரகமே. நீ எமக்கும் பிரமனுக்கும் நலம் செய்த

திருப்புடை மருதூர்க்குச் சென்று வழிபட்டு நலம் பெறுக' என்றார். அவனும் அவ்வண்ணமே செய்து நலம் பெற்றான்.

சுந்தரேச மாறன் என்ற பாண்டியன் இத்தலத்திற்கு வந்து இறைவழிபாடு செய்து பல்வேறு திருப்பணிகள் செய்து நல்வாழ்வு பெற்றான்.

## 21. மூன்றீசுவரப் படலம்

மூன்றீசர் என்ற திருப்பெயர் இத்திருக் கோயில் இறைவனுக்கு வந்த வகையையும் மேலும் சில சிறப்புகளையும் இப்படலம் உரைக்கிறது.

வேதங்கள் இத்தலத்தில் இறைவனைப் பூசித்தன. பெருமான் இத்தலத்தில் வேதப் பொருளை விரிவாகச் சொல்லியருளினான்.

சூரனுக்கு இறைவன் வரங்கள் நல்கினான். அவன் தேவர்களுக்குத் துன்பம் செய்தான். தேவர்கள் முறையிட்டனர். இறைவன் தனது சக்தியாகிய முருகனைத் தோன்றச் செய்தார்.

தேவியின் சிலம்பிலிருந்து ஒன்பது மணிகள் தெறித்தன. அவற்றில். உதித்தவர்கள் நவ கன்னிகள். 'கருத் தோன்றாது' என்னும் சாபத்துடன் அவர்கள் உதித்தனர். அவர்கள் மூன்றீசரை வணங்கிச் சாபம் நீங்கப் பெற்று நவவீரர்களைப் பெற்றனர்.

சிவன் வானில் உமையுடன் உலாவும் போது அவன் குழையிலிருந்து ஒரு மணி உதிர்ந்தது. அது உதிர்ந்த இடம் மணிகர்ணி தீர்த்தம் என இத்தலத்தில் உள்ளது. இந்நிகழ்ச்சி அகத்தியன் இத்தலத்தைப் பூசித்தபோது நிகழ்ந்ததாகும்.

அகத்தியன் இத்தலத்தில் பூசித்த போது இறைவன் மூன்று கூறாகக் காட்சி கொடுத்தார். அதற்கு என்ன விளக்கம் என அகத்தியர் இறைவனைக் கேட்டார். மால், அயன், அரன் எனும் மூன்றும் ஒன்றான மூன்றீசுவரத் தோற்றம் பற்றி இறைவன் விளக்கினார்.

கருவூர்ச்சித்தர் இத்தலத்தில் வழிபட்டுச் சிவன் சித்தலிங்கமாய் விளங்க வேண்டும் என வேண்டிவரம் பெற்றார்.

சவுந்தர ராசபாண்டியன் பலதிருப்பணிகள் செய்தான். மற்றும் சண்பக மாறன், பராக்கிரம பாண்டியன் ஆகியோரும் பல திருப்பணிகள் செய்தனர்.

உ

**சிவமயம்**

# திருப்புடை மருதூர் என்னும் புடார்ச்சுன பதிப்புராணம் புடார்ச்சுனமான்மியம்

## கடவுள் வாழ்த்து

பூமேவு புடார்ச்சுன புண்ணியற்கே அவர்புகழாம்
பாமேவு நால்வகைய சொல்மலரால் பத்திபெற
நாமேவுஅக் கரநாரே நாராகத் தொடைஇயற்றக்
காமேவு மருதடிஐங் கரன்அடியைக் கைதொழுவாம் 1

கூறும்பூ உடையோனும் குவலயப்பூக் கொண்டோனும்
தேறும்பூ அடிமுடியும் தேடுதற்கும் தேற்றாதார்
ஆறும்பூ வும்புனையும் அஞ்சடையார் அன்பூறு
நாறும்பூ நாயகர்தம் நாறும்பூம் பதம்நவில்வாம் 2

## வேறு

பூவி ளங்குக! புண்ணியர் மல்குக!
கோவி ளங்குக கொண்டல் பொழிகுக!
சேவி ளங்கு சிவன்பணி நீடுக!
மாவி ளங்கும் வளங்கள் பொலிகவே! 3

மருத வாணனைப் பூசிக்கும் வண்மையார்
சரதர் இந்தச் சரித்திரம் சாற்றுவோர்
வரதர் உட்புற மெய்அடி யார்துதி
பரவும் வாய்மையர் பண்பினர் பல்கவே 4

மருத நாதன் மகிமையை வாழ்த்துவோர்
சரத வாழ்வும் சந்தானபந் தானமும்
கருது ஞானமும் பெற்றுக் கடவுளாய்த்
திருவி ளங்கிச் சிவகதி சேர்வரே 5

பேசு நால்வர்க் கருளிய பிஞ்ஞகன்
வாசம் உற்றிடு மால்வ ளம்பதி
மாசி லாதச தாசிவ மாமணித்
தேசி கன்பதம் சென்னியில் சேர்த்துவாம் 6

மண்டலத்தினில் நால்வகை மாட்சிநூல்
பண்டு கண்டவன் பாலகன் பால்வந்த
புண்ட ரீகபு ரம்புகழ் தேசிகன்
கண்ட காதைஇ வைஎன்பர் கற்றுளோர் 7

வாழ்க தெட்சண காசி வளம்பதி
தாழ்வி லாத புடார்ச்சுனஞ் சார்ந்தருள்
சூழ்இ லேபன சுந்தரன் தொல்கதை
ஏழ்பெ ரும்புவி எங்கும் விளங்கவே 8

பூதி நாயகர் புடைமா மருதீசர் கயிலேசர்
புனித யோகர்
தாதுலாவி நாறும்பூ நாதர் மனுவரதர்
சம்பு வாணர்
வேத காரணர் சாய்ந்தோர் சித்தர்பால்பேசும்
இலேபன வினோதர்
ஆதி கோமதி சேர்வுடை மாது பாகர்
எமதகத் துளாரே. 9

காவுடைய கருங்குழலும் கருணைபொழிந் தருள்விழியும்
கமலம் மேவு
பூவுடைய மலர்முகமும் புனைகாதும் துவர்இதழும்
பொன்பூண் ஏந்து
மாவுடைய கனதனமும் வளைக்கரமும் பட்டுடையும்
அழகு வாய்ந்த
ஆவுடைய நாயகியார் இருசரணக் கோலமும்எம்
அகத்துள் வைப்பாம். 10

சந்தவரை முனிகடத்திற் சைவரை தனில்புனிதன்
தவத்தால் சார்ந்து
முந்தையொரு கொடிபோல் = வந் தேகவிழ்க்கக் கண்டுமுனி
முனிமுன் தோன்றி
சிந்துரஆ னனன்இவன்என் றறிந்திலேன் எனக்கரத்தால்
சிரத்தில் தாக்கி
வந்தனைசெய் திடம்புரிந்து மகிழ்மருத வாரணத்தை
வணக்கம் செய்வாம் 11

திருமானை உரத்தில்வைத்துச் செகமானைப் புணர்வோனைத்
தேசம் பூத்த
பெருமானை இருபாகப் பெம்மானைத் தந்தை எனப்
பெறும்எம் மானைப்
பொருமானை என்மானைப் பொருமிகண் வேடர்குலப்
புனமான் முன்பு
வரும்ஆனை முகற்கிளைய மலைமானின் மருமானை
வணக்கம் செய்வாம் 12

வெள்ளி மால்வரைக் கயிலையில் வேதியன்
மால்முதல் விண்ணோர்க்கு
வள்ளல் நல்கிய படிஐந்து சபையினும்
மகத்துவம் மருதின்பால்
புள்ளி நாகனும் புலிப்பத முனிவனும்
போற்றிடப் பொதுமேவிக்
கள்ள லர்க்குழல் காணவே நடமிடும்
காரணன் கழல்போற்றி. 13

நல்லோர் சூழ்ந்திட நயந்து சனகன்
முதல்நான் மறைகளெல்லாம்
வல்ல வர்க்கிசை யச்சொல் இறந்த
பொருளே தான் இதுவே
அல்லா தொன்றிலை அறிவீர் என்றே
அருளால் அருள்செய்து
கல்லா லின்நிழல் அமர்ந்தகார
ணர்தம் பதம்போற்றி 14

இந்திரனே முதலான எண்மர்இமை யோர்கள்எலாம்
சந்திரசே கரர்தம்மைத் தொழுசமையம் பெறுதற்காய்
மந்திரம்சூழ்ந் திவர்மலர்த்தாள் வணங்கிமகிழ்ந் திவாவானைச்
சிந்தைகளிப் புறவணங்கச் செய்தநந்தீ சுரர்பணிவாம். 15

கவளயா னையை உரித்த கறைமிடற் றானை யன்னத்
துவளரு மறையோன் கற்பம் தோற்றிடு முன்னைத் தொல்லை
தவரிறை தருமம் எல்லாம் தான்ஒரு வடிவாய்த் தோன்றிப்
பவனமால் விடையாய்த் தாங்கும் பசுபதி பதங்கள் போற்றி. 16

அரனருள் மைந்தர் நால்வர்க் கமைத்தஆச் சிரமம் தன்னில்
கரிமுகன் பிரம சாரி காங்கயன் கிருக சாரி
அரிஅர புதல்வன் வானப் பிரத்தனே ஆகும் யோகி
பரியெகி னத்தின் மேவும் பயிரவற் றொழுது வாழ்வாம். 17

மாக்களை உகைத்துச் சேரர் தோழரும் வஞ்சி நீங்கி
மேக்குயர் கைலை எய்தி விமலன்பால் அரசர் சாற்றும்
பாக்களைப் புவியில் தந்த பண்புடைச் சாத்தன் தாளை
நாக்களால் பரவிப் போற்றி நன்முடி தரித்து வாழ்வாம் 18

பொருதுகா னவளை மாய்த்துப் புகர்கொடு புவியில் சார்ந்து
சுரர்குரு விதித்தவாறே தாககே சுரத்தில் வந்து
மருதினில் தவம்செய் தன்பால் மனுவர தனைப்பூ சித்துப்
பிரமதோ டத்தை நீங்கும் புனிதனைப் பேணி வாழ்வாம் 19

பாந்தராய் அருள்சிவசம் பந்தராய் உமைமுலைப்பால்
பரிந்துண் பாராய்ச்
சாந்தராய் மறையவராய்ச் சைவபரி பாலகராய்த்
தலைவ ராய்மன்
காந்தராய் உறைபவர்பால் கருத்தராய் மணவாது
கடந்த ராய்நன்
பூந்தராய் தனில்ஞானப் புனிதராய் வந்தவர்தாள்
போற்றி வாழ்வாம். 20

## வேறு

அந்தரர் முதலோர் உய்ய ஆழிநஞ் சமுதம் உண்ட
கந்தரன் போல அன்னோன் கருணையால் அமண்கார் ஆழி
தந்தநஞ் சமுதம் உண்டு தரணியில் சைவம் ஓங்க
வந்தருள் கின்ற நாவுக் கரசரை வழுத்தி வாழ்வாம். 21

அடிமுடி இருவர் தேடி அளந்திடற் கரியார் தம்மைத்
தொடர்வுடைப் பதிகம் பாடித் தோழமை யாகக் கொண்டு
படியினில் பரவை ஊடல் பரிந்திடத் தூது கொண்ட
முடிவிலா நாவ லூரன் முளரிஅம் பதங்கள் போற்றி. 22

நாவல்ல தமிழால் இந்த நல்தல உண்மை தன்னைப்
பூவல்லிப் பதிகம் தன்னில் பொந்தைநாம் பரவி என்றும்
பாவணி வாச கத்தில் பாடிய வாத வூரர்
சேவடிக் கமலப் போதைச் சிந்தித்தெப் போதும் வாழ்வாம். 23

தாதைதாள் தடிந்து பெற்ற தண்டிநா யகர்தாள் போற்றி
பூதிசா தனம்பு ரந்த கோதையார் பொற்றாள் போற்றி
மாதொரு பாகர்க். கன்பாம் வரம்பினால் தொழும்பு செய்து
நாதராய் இருந்த தொண்டர் நாயன்மார் சரணம் போற்றி. 24

செந்தழல் புரையும் மேனிச் சிவனருள் வரத்தினாலே
விந்தைவெற் படக்கி விண்ணோன் வேண்டுதற் கங்கை யாலே
உந்துவா திரை அடக்கி உலகெலாம் நிலைபெற் றோங்கச்
சந்தவெற் பதனில் வந்த தமிழ்முனி சரணம் போற்றி. 25

## வேறு

சிந்தையாற்சிவ மூழ்கி அழைத்திட
எந்தை சாய்ந்தவர் ஏன்என் றெதிர்மொழி
உந்தி காட்டும் வழிஉறு வாய்என
வந்தி டும்கரு வூரனை வாழ்த்துவாம் 26

எந்தை பூதிவா தாக்கி சைந்திட
வந்து கோயில் திருப்பணி வாய்ப்புடன்
உந்த வேசெய் மனுகுல உத்தமன்
கந்த நாள்மலர்ப் பாதம் கருதுவாம். 27

வெள்ளை மேனியில் வெண்மலர் மாலையும்
வெள்ளை ஆடையும் வெண்பணி யும்புனை
வெள்ளை ஓதிம வேதியன் நாவில்வாழ்
வெள்ளை வாரிசத் தாள்பதம் வேண்டுவாம். 28

பன்னும் வேதப் பரமற்குப் பத்தியாய்
மன்னு கின்ற திருப்பணி மாண்புடன்
நன்ன லங்கொளச் செய்திடு நாயன்மார்
பொன்னம் பொற்கழல் போற்றிப் புனைகுவாம். 29

-கடவுள் வாழ்த்து முற்றும்-
ஆகத் திருவிருத்தம் 29

## பாயிரம்

மாத வன்சுகன் கேட்க மகிழ்வுடன்
வேதம் மேவும் வியாசன் அருளிய
காதை யைத்தவ யோகர் கழறென
சூத மாமுனி சொல்லல்உற் றான்அரோ. 1

பதினெண் நூலில் பரன்இயல் பத்தினுள்
கதிவி ளங்கிய சைவத்தில் தோன்றிய
மதித ருநதிச் சேத்திர வைபவ
விதியின் தோன்றிஇக் காதை விரிந்தவே. 2

சொல்லும் இவ்வியல் தூய பொருநைசூழ்
மல்லல் அம்பதி மன்னு புடார்ச்சுனச்
செல்வன் செய்கை தெழியும் கருத்தான
பல்பெ ரும்புகழ் பாலித்த பான்மையே. 3

பொருவி லாஇச் சரிதையைப் போற்றுவோர்
கருது நாற்பயன் எய்துவர் நற்கதி
தரும்இக் காவியம் சாற்றுனர் கேட்குனர்
பெருமைச் சைவ சமயப்ர தாபரே. 4

ஏற தேறும் இறைவன் கீர்த்தியைக்
கூறு கின்ற வடபதக் கொள்கையைத்
தேறி மெய்அரு ளால்முனி செப்பிய
மாறி லாத திராவிட வாய்மையால். 5

முதிய பாவிருத் தம்துறை முற்றுற
விதியி னால்உரை என்று விரும்பிஇப்
பதியி னில்பெரி யோரும யற்பதி
மதியி னில்பெரி யோரும் வகுத்தனர். 6

நல்ல தென்றவை காரணம் நாட்டியே
எல்லை நான்குடன் பயிலும் இயற்றமிழ்ச்
சொல்லி னால்தமி யேன்செயச் சூழதல்
கல்ல ணைக்கணில் செய்பணி காட்டுமே. 7

-பாயிரம் முற்றும்
ஆகத் திருவிருத்தம் 36

## அவையடக்கம்

ஆணிப் பொன்அமை யும்பணி இவ்விடம்
பூணற் கென்றறி யேன்புகல் சொற்கலை
வாணற் கொவ்வில வேனும் வான்சொலைப்
பேணிக் கொள்கப் பெரியோர் பெருமையால். 1

## வேறு

மணியினால் கனகம் தன்னால் வழங்குறும் பணிம திப்போர்
அணியுலோ கத்தால் மற்றால் அமைபணி அகற்று வாரோ
பணிமிகச் செய்யாப் பொன்னும் பைம்பொனே அதுபோல் ஈசன்
துணிவுடைக் கீர்த்தி என்று துகள்அறுத் துட்கொள் வாரே. 2

எலும்புவெண் டலைஎ ருக்கோ டேனக்கொம் பாமை யின்நன்
கலம்பல அன்றி நஞ்சார் கட்செவி கங்கை கண்டத்
திலங்கவே இவைஅ ணிந்தார்க் கேழையேன் உரைக்கும் புன்சொல்
அலங்கலும் புனைவார் என்றே அதுவும்ஓர் உறுதி தேர்ந்தேன். 3

-அவையடக்கம் முற்றும்-
ஆகத் திருவிருத்தம் 39

## கயிலைச் சிறப்பு

மெய்யர் மெய்யினில் பூசும்வெண் ணீறுபோல்
துய்ய பான்மையில் தோன்றும் கயிலைதான்
வையம் ஈன்றருள் வாலை உமையுடன்
ஐயர் வீற்றிருக் கும்திரு ஆலயம். 1

புகழ்உருக் கொண்ட தெனப்பவப் பூதரம்
துகள்இ லாதவர் சிந்தையில் தோன்றுவோர்
சகள மாக நிறைந்திடும் தாபரம்
நிகளம் தீர்அயி ராவணம் நிற்பது. 2

மற்ற மாவும் பகைஇன்றி வாழ்வது
சுற்றும் தேவர் முனிவர் துதிப்பது
பற்றி லாதவர் பற்றும் பதிஅது
கற்ற வர்பர வும்கயி லாசமே. 3

போற்று கின்றஇப் பூதரம் தன்னிலே
ஏற்று கந்த இறைவர்தம் கோயிலில்
சாற்று கோபுரம் சூழ்சந்நி தானத்தில்
மாற்றம் இல்லதோர் மானத வாவியே. 4

அந்தத் தீர்த்தத் தருகில் அணிபெறும்
சந்தம் மேவும் தமனியத் தால்பொலிந்
துந்தும் ஆயிரக் கால்மண் டபம்உள
தெந்தை யன்பர்க ளெய்தி யிருப்பிடம். 5

## வேறு

மன்னுமண் டபத்தா லின்கீழ் வதிந்தர னுக்கோர் வைகல்
சொன்னநூற் பொருளை முன்னம் சூர்தடிந் திடும்வேற் கந்தன்
அன்னைதன் மடியில் எய்தி அனைத்தும்தேர்ந் ததனை அன்பால்
துன்னிய சனற்கு மாரர் அகத்தியர் தமக்குச் சொன்னான். 6

சொல்லிய பொருளை எல்லாம் துரிசறு சனற்கு மாரன்
நல்லவி யாசற் கோத நயப்புடன் தெளிந்தன் னானும்
கல்விசேர் சூதற் கோதச் சூதமா முனிவன் கற்றுப்
பல்பெரு முனிவற் கோதப் பயன்பெறு முனிவன் ஓர்கால், 7

பூதலம் தனில்சி றந்த நைமிசா ரணியம் போந்தான்
மாதவம் இயற்றி அங்ஙன் வதிகின்ற மவுன யோகர்
போதக வாணர் போத சாதகர் பொய்யைக் காய்ந்தோர்
ஆதரம் பெருகு பக்கிரி மரீசியோ டைங்கி ராவே 8

காசிபன் சாது கன்னன் கர்க்கன்கண் ணுவன்வ சிட்டன்
பேசுமுற் கலன்சி லாத முனிசங்கன் பிருகுத் தங்கன்
கோசிகன் பரத்து வாசன் கோதமன் குமுதன் பார்க்கன்
மாசுதீர் முனிமார்க் கண்டன் முதலிய மாத வத்தோர், 9

பன்னகா பரண யோக சமரச பருதி வாணர்
தன்னையாற் றிருபோ தற்ற இடத்தினில் சயன முற்றோர்
சொன்னவே தாக மத்தோர் சுயம்பிர காச நீரார்
மன்னுமா சற்றோர் யாரும் எதிர்கொடு வந்து சூழ்ந்து, 10

பாதங்கள் பரவி யோக ஆதனம் இட்டுப் பண்பால்
போதுடன் சாந்தம் கந்தம் அருக்கியம் புனலால் போற்றிக்
கோதிலா முகமன் கூறிக் கரைஇலாக் குணங்கள் பேசி
மாதவ முறையால் வாழ்த்திச் சூதரை வணங்கிக் கேட்பார் 11

நாங்கள்செய் தவத்தால் இங்ஙன் நண்ணினீர் நம்பன் கீர்த்தி
ஓங்கிய மேன்மை யான சிவத்தல உண்மை யெல்லாம்
பாங்கினில் உரைத்தீர் முன்னும் இன்னமும் பருக ஆசை
தீங்கிலத் தலவி சேடம் தீர்த்தம்நின் மலன்வி சேடம், 12

மூவகை ஒருங்கு மொய்த்த முன்னவன் பதிவி சேடம்
மாவுள மனையீர் எங்கட் கருள்செய்வீர் என்ன அன்பாய்
மேவிய தவவி யாசர் விருப்புடன் உரைத்த வாறே
தாவிலா மகத்வம் ஆன சரித்திரம் சாற்று கேமால். 13

பகுத்திடும் சுருதி நான்கில் பரப்பிய பொருளின் உண்மை
இகத்தவர்க் காக மூவா றியம்பிய புராணம் தன்னில்
சகத்தைஉண் டவற்கு நாலாம் சதுமுகற்கிரண்டாம் சண்ட
முகத்துடன் இரவி தீக்கொன் றொன்றதாய் மொழிந்த தின்னும். 14

முன்னவ புராணம் பத்தில் முதல்சைவ நூல்மொ ழிந்த
பன்னுசங் கிதையில் ஒன்று பரமசங் கிதையில் காண்டம்
சொன்னநான் கதனில் சேத்ர வைபவச் சுருதி தன்னில்
தென்னிலம் அதனில் காசிச் சேத்திரம் ஒன்றுண் டாமால் 15

அத்தலம் புடைசேர் கின்ற அருச்சுனம் அதனில் வேத
வித்தக முனிவர் நீவிர் விருப்புடன் வேண்டு கின்ற
உத்தமப் பொருள தான உயர்பதி தீர்த்தம் ஈசன்
நித்திய விசேட மாக நிகழ்வது நிகழ்த்து கேமால். 16

அவனிசேர் தவலோ கம்தான் சிவலோக மான இந்தச்
சிவன்நகர்ப் பெருமை எண்ணிச் சேர்ந்திடப் பெறுகின் றோரும்
தவம்உயர் ஞானம் மேவிச் சீவன்முத் தர்களாய்ச் சார்வர்
இவர்களுக்கு எய்தும் பேறு வேறுஎவன் எண்ணும் காலே. 17

எத்தலத் தினும்வி சேடம் ஒன்றிரண்டு எய்தும் இந்த
மெய்த்தலம்மூவி சேடம் விளங்கிய மேன்மை யாலே
முத்தலத் தினிலும் நன்காம் முறைஅறிந் திங்ஙன் எய்த
வித்தகர் ஆகி மேலாம் வீடுபெற்று உயர்வர் என்றே, 18

சகத்தணி திலகம் என்னும் தண்புடை மருத மாத
மகத்துவத் தலத்தின் எல்லை வருசரம் அசரம் ஆன
தொகுத்திடும் உயிர்கள் தம்மில் தொல்வினை உடலை நீங்கத்
தகைத்திடும் வேளை ஈசன் தாயுடன் விடைமேல் சார்ந்து, 19

பயம்ஒருவு என்று சாற்றிப் பசுவினை மடியில் ஏற்றி
வெயர்வினை முந்தி யாலே விமலைமாற் றிடவே ஈசன்
தயவுடன் வலதுகாதில் தாரக உபதே சத்தை
நயமுடன் ஓதி வேண்டும் நல்வரம் அளிப்பான் அன்றே. 20

மெய்த்தல உண்மை இன்னும் விளம்புதும் விடையம் நீங்கும்
சித்தர்கள் ஓர்கா லத்தில் செங்கம லத்து மேய
உத்தமன் திருமால் இந்த்ரன் முதலிய உம்பர் போற்ற
நித்திய சபையில் எங்கோன் நடம்செய்து நின்ற வாறும், 21

மாதவன் காசி தன்னில் மாதவன் உபதே சத்தால்
பூதலத் தரனைப் போற்றிப் புடைஅருச் சுனத்தில் வந்து
நாதனைப் பரவி எங்கோன் அருளினான் நதியின் நீரால்
போதகம் தன்னைக் காத்து முதலையைப் பொருத வாறும், 22

விண்பகை யாய்எ திர்ந்த விச்சுவன் தன்னை வென்று
திண்படு பாவம் நீங்கத் தேசிகன் விதித்த வாறே
மண்புகழ் புவியில் தென்பால் மருதுடன் மருதாய் ஒன்றித்
தண்படு முகில்ஊர் அண்ணல் தவத்தினில் சார்ந்த வாறும், 23

இந்திரன் தன்னை நேடி இமைய வருடனே போந்த
சுந்தரி விரத மாற்றிச் சுந்தரன் தன்னைப் போற்ற
வந்தரன் மருதில் தோன்றி மருத்துவுன் பாவம் தீர்த்து
நந்தல்இல் வரங்கள் நல்க நல்வளம் பெற்ற வாறும், 24

மனுபதி இவண்வந் தெய்தி மருதனைக் காணான் மாழ்கி
உனிஅருச் சுனத்தில் வேலை உய்த்ததில் பாய உள்க
அனையவன் செய்கை கண்டே அரன்அவண் எய்தப் பெற்று
நனியவான் பணியை முன்னி நற்றவம் செய்த வாறும், 25

சிவன்பணி கருதி வேந்தன் செய்திடும் தவத்துக் காகப்
பவன்அந்த இலிங்கத் தின்பால் பாவனை வடிவாய்த் தோன்றித்
தவமனுக் கருத்தின் பாங்காய்ச் சங்கரன் அங்ஙன் வைக
உவமையில் குணபால் கோயில் உவப்புடன் செய்த வாறும் 26

பங்கயன் காசி எய்தப் பரன்அவன் முன்பு தோன்றி
கங்கையின் சோத கம்நின் கதையினால் மருதில் காண்பாய்
அங்கண்எய் திடுவாய் என்றான் அதுமுற்றி அருச்சு னத்தில்
தங்குநா யகனைப் போற்றித் தண்டம்தா பித்தவாறும், 27

பதியத்தி தீர்ந்தவாறும் பணவனி சத்தை உற்ற
விதியவிர்த் தானன் பாவம் வீய்ந்திடு செயலும் வெள்ளை
மதியன்கோ தமனால் வால சதானந்தர்க் களித்த வாறும்
நிதிதரு பவுத்தம் நீங்கி நிருபர்கோன் பெற்றவாறும், 28

கதியல தந்த னுக்குக் காட்டிய செயலும் கங்கை
நதியின்பால் கருவூ ரற்கு நல்கிய நலனும் நாதன்
விதிமணக் கோலம் போற்றி விருப்புடன் அருச்சு னத்தில்
பொதிகைமா முனிவன் வந்து புகழ்வரம் பெற்ற வாறும், 29

பங்கயன் திருமால் ஆதிப் பண்ணவர் முதலாய் யாரும்
புங்கவர் முனிவர் யாரும் புடைஅருச் சுனத்தில் வந்து
மங்கையோர் பாகன் தன்னை வழிபட்டுத் தார கத்தைச்
சங்கரன் அருளப் பெற்றுச் சாயுச்யம் பெற்ற வாறும், 30

பின்னும்ஓர் காலம் தன்னில் பிறைமுடிப் பெருமான் தன்னை
மன்னவன் மாறன் போற்றி வரங்கள்பெற் றுய்ந்த வாறும்
கன்னியாம் பொருநைத் தீர்த்தம் காசினி நதியாய் ஓங்கித்
துன்னுவோர்க் கருளி முந்நீர்ச் சங்கமம் சுலவு மாறும், 31

பழமறை பரவும் ஆத்தி வனப்பதிப் பண்பும் தென்பால்
குழகன்வாழ் பூவ னத்தின் கொள்கையும் அதற்குத் தென்பால்
விழவுய ரரிகைச் சேத்ர மேன்மையும் மேல்பால் மூன்றாய்
அழகிய பரமன் வைகு மடிகைமா னகர்ச்சி றப்பும், 32

முனிவரர் அருச்சித் தேத்தும் முறைமையும் முன்னை ஓர்கால்
பனிவரை இமயச் செல்வி பாலகன் தந்த வாறே
மனியசந் தானச் சூதன் வகுத்தனன் வகுத்த வாறே
கனிவுடன் தொகையிற் கூறி வகைஇனிக் கழறல் உற்றேன். 33

திருநகரந் தீர்த்தமான வரலாறு திருநடனம்
புரிபுனிதன் தவ மோட்சம் அரிபரவ லாதிமனுப்
பரவல் ஆலயம் பிரம ரப்பதி யத்தியவிர்த்தானன்
தரும்அல கைஉரு நீங்கும் வாலசதானந்தமுனி 34

அகனிங்கு பவுத்த மதனல தந்தன் அருட்சித்தன்
சகம்நீங்கு குறுமுனி தாரக மோட்சம் தமிழ்வேந்தன்
தொகையாக நாலைந் தர்ஞ்சூழ்ந்த தலஞ் சொலவைந்தாம்
வகைஇரு பத்தோ ரைந்து படலவிரி பகுத்து ரைப்பாம். 35

-வரலாறு முற்றும்-
ஆகத்திருவிருத்தம் 74

## நாட்டுப் படலம்
### மழைவளம்

மன்செய் காலத்தில் ஆதிமா மனுமறை வழியே
மின்செய் வாளினால் கலிப்பகை ஒதுக்கிமே தினியை
முன்செய் கோலினால் முறைநிறுத் திடவளம் ஓங்கும்
பொன்செய் குன்றெனும் பொதிகைநாட் டணியினைப் புகல்வாம். 1

மைய்ய வாநிறக் கடல்எனும் மன்னன்வான் என்னும்
செய்யும் மெய்வகை அமைச்சுடன் தேர்ந்துமா நிலங்கள்
உய்ய வேதன தரசுசெய் வதனையே உன்னி
வெய்ய கோடைமேல் மிகைசெய நாற்படை விதிப்பான். 2

வானெலாம் மள்ளர் மின்வாள் வார்முரசு அசனிஆர்ப்பத்
தானம தொழுகும் வேழம் சாகரம் உழந்த கொண்டல்
பானுரை கவரி மச்சம் பாய்திரை வாசி யாகச்
சேனையாய் அணிவ குத்துத் திரைமுகில் இரதம் ஊர்ந்தே, 3

வான்வழிப் படர்ந்துகார் மலையப் பாசறைத்
தானம தெய்திவிண் தாரத் தெழுந்ததன்
மானநீர்ச் சேனையால் மதித்து மேவலர்
கானலார் பாளையைக் களையச் சூழ்ந்ததே. 4

தனுஎனும் இந்திர சாபம் கோட்டிமின்
கனைசெறி சோனையாம் கணைகள் தூவியே
வனைதரு கூளித்தேர் மன்னை மாற்றிவான்
புனைகடல் ஆழியால் புவனம் காத்ததே. 5

தென்மலை உச்சியில் பொழிதல் தெண்டிரை
மன்னவன் வழிபட வந்து மஞ்சன
முன்னவன் நாறும்பூ முடியி னிற்சொரிந்து
இன்னபொன் மலர்களால் இறைஞ்சல் மானுமே. 6

வானவன் அமுதலர் கொண்டு வானவர்
வானவர் குறுவழி பாடு செய்வன
வானவன் வானமார் மலையின் மாமழை
வானவ மணியுடன் சொரிந்த வண்ணமே. 7

விண்டுயர் மஞ்சனம் விமலர்க் கீய்ந்தென்ன
விண்டுயர் மலையினில் விண்டு பெய்தவை
விண்டுரை தந்தனம் பொழிந்த வேணிநீர்
விண்டுவிற் கொடுபுனை விளைவை ஒதுவாம். 8

### வேறு

விரைசெய் சந்துசூழ் பொதிகையின் மேல்மழை விரவி
அருவி கான்றிழி அழகுதான் அந்தரத் தெய்வச்
சுரபி நாயகன் முடியின்மேல் சுரந்தபால் அதனைச்
பரவி யேசொரி கின்றன ஒத்தன பண்பே. 9

சொரிந்திழி அருவிசூழ் காஞ்சி மேகலை
மரஞ்செறி பொதிகையாம் வனிதை மாதனத்து
அரும்பெறல் ஆரம்ஒத் திடும்அன் றேல்உயிர்க்கு
இரங்கிவீழ் பாலெனும் இசைக்கல் ஆகுமே. 10.

வரைபெறு வனமகள் வனமும் சோலையும்
குரைவுடன் தவழ்ந்துகால் கொடுந டந்துமென்
கரைஉடைந் திடவிளை யாடிக் கன்னிநீர்
புரைதவிர் வண்டலாட் டயர்ந்து போனதே. 11

குறிஞ்சிபால் முல்லை பண்ணை கோல்வளை நெய்தல் என்னும்
சிறந்தபூ மகளிற் காயாய்ச் செவிலியின் அமுதம் ஈய்ந்து
பெறும்பல பருவம் தந்து பேணியே பரைஒப் பாக
அறம்பல இயற்றி நாளும் அருமையாய் வளர்க்கும் அன்றே. 12

மணந்தவன் மனையிற் செல்லும் மங்கல மகளிர் போல
வணங்கிடை வஞ்சி மீதிற் காஞ்சிவாய்ந் தணிமுத் தாரம்
இணங்கிட வளையும் தோடும் கூந்தலும் இசைந்தங் குள்ள
கணந்தரு பலவும் கொண்டு கன்னிநீர் கடல்மேற் செல்லும். 13

பொதியமாம் வனிதை கொங்கைக் குவட்டினில் பொதிந்த சாந்த
மதுமலர்க் கூந்தல் தாது வாசமார் ஏலம், மற்றப்
பதிவ்ரை மாதர் ஆடும் பழுக்கரி சனமும் கூடி
நதியினிற் கலங்கி நல்லோர் உளம்என நணுகிற் றன்றே. 14

அலர்தலை உடைய தாலும் அரவமும் தரித்த தாலும்
தலைஅணி வேணி யாலும் தரைவழிப் படுத லாலும்
கலைவரி வேங்கை சுற்றிக் கடுக்கையும் புனைத லாலும்
சிலைவரை உடையோன் போலும் சிறந்தது பொருநைத் தீர்த்தம். 15

வான்வழிப் பிறத்த லாலும் வரைதனை வளர்த்த லாலும்
தேன்நிகர் சொல்லி னாலும் திசைஎலாம் அமுதம் ஊட்டித்
தான்வளர்த் திடுத லாலும் தண்புனல் தலைவற் சார்ந்து
தூநலம் படைத்த கன்னி இமையமன் தோகைக் கொப்பாம். 16

வளைஉறு பாணி யாலும் வாரிபால் மேவ லாலும்
குளிரலர்த் தாரை யாலும் குவலயம் கொள்வ தாலும்
நளிர்கம லத்தாள் பூமான் தன்னிடம் நயந்தே ஆர்வம்
விளைவுறப் பெருகும் உந்தி விறல்அரி நிகர்க்கும் அன்றே. 17

பங்கய மேல தாலும் படைத்திடும் குணத்தி னாலும்
தங்கிய வனத்தி னாலும் தகும்கடம் ஏற்ற லாலும்
மங்குல்மே னியனால் உந்தி பெற்றிட வருத லாலும்
பொங்கிய பொருநை நீத்தம் பூமனைப் போன்ற தன்றே. 18

ஈறிலா வேலை முன்கொண் டெறிந்துசூர் அலைவாய் முற்றக்
கூறங்கே கயமேற் கொண்டு கூர்வள்ளிக் கொடியைச் சார்ந்தும்
ஆறிரு கையால் தேனும் தினையும்கொண் டார்த லாலே
மாறிலாப் பொருநை கந்த மைந்தனை மானும் அன்றே. 19

வரைவளர் அகிலார் சந்து வன்னிமந் தாரம் கொன்றை
விரைமலர் விளைந்து வேழ மாவருக் கைநல் வாழை
உரைதரு கனிதேன் கொண்டே உந்துநீர் சாய்ந்தோர் தம்மைத்
திரைவளைக் கையால் பூசை செயவரும் தொண்டர் போலாம். 20

## வேறு

வருக்கைமா வாழைத் தீங்கனி வழிந்திழி
பெருக்குதேன் சேறுடன் பொருநை பெய்குளம்
தருக்குநீர் நிலந்தொறும் சார்ந்து பேணியே
முருக்கிய உவர்கடிந் துவரி மொய்த்தவே. 21

இன்னணம் பெருக்குயர் பொருநை யின்துறை
மன்னவன் ஆணையால் உலகம் வாழ்தல்போல்
துன்னுநீர் வினைஞரால் சார்ந்து கால்வழி
செந்நெலை வளர்த்திடும் செய்கை பூண்டதே. 22

## வேறு

வெள்ள நீர்பரந் தருவிகால் ஓதையும் வேலை
மள்ளர் ஓதையும் வருபுனல் சிறைசெய்கம் பலையும்
கள்ளு லாவிய கன்னலைப் பாகுசெய் கறங்கும்
பள்ள நீரொலி தன்னைமாற் றுவநதிப் பாலே. 23

அணையிற் கூடலால் வாரமே பெருக்கலால் அகன்கால்
பிணையற் கேற்றலால் கட்டியே கிடைக்கையால் பிறியா
மணிமுத் தாடலால் உவரியிற் சேரலால் வருநீர்
துணைவற் கூடியே தோய்பவர் போகத்தைத் தோற்றும். 24

நீர்ப ரப்பிய நிலம்தொறும் நெறிகொடு மள்ளர்
ஏர்ப ரப்பியே உழுபவர் இறைவலி வளமைச்
சீர்ப ரப்பியே சேறுசெய் நாறுசெய் வார்கள்
பார்ப ரப்பியே பயிர்செய்து வளம்படுத் திடுவார். 25

மேன்மை ஆகிய பலன்களை எய்துவான் வேண்டித்
தான மேசெயத் தவம்தர கிளர்குநல் தவம்போல்
ஏன மேபெறும் உழவர்கள் இடுபயிர் எங்கும்
வான மேபொழி பருவத்தால் வளர்வன அன்றே. 26

வேலை யாம்எனும் மடுவில்வீழ் மேதிகள் பொழிந்த
பாலை வாளைகள் பருகியே யுகழ்தரப் பணைத்த
சோலை நீள்கனி உதிர்தலிற் பனசத்தேன் சுளைவிண்
டாலை பாய்நறை யத்துடன் பாய்வன அயலே. 27

## களைகட்டல்

திருவந் தெய்தியே வளம்பெறு செல்வர்கள் செல்வம்
தருமம் செய்திடத் தழைவபோல் தழைந்திடும் பயிர்க்குக்
கருவன் கால்மள்ளர் களைகளை பதம்எனக் கருதிப்
பருவம் காட்டிடக் கடைசியர் பணைதொறும் படர்வார். 28

நறவம் மாந்துவர் கடைசியர் நகைமுகத் தரும்பச்
சுறவு நோக்குவார் கன்னலோ செந்நெல்சொல் என்பார்
புறவு நோக்குவார் சாடைகள் பேசுவார் புகுவார்
அறலின் ஆர்ந்தசெய்க் கணியதாய்க் களைஅகற் றிடுவார். 29

ஊடி னார்எறி தார்எனக் கஞ்சம்உற் பலம்தேன்
பாடும் ஆம்பல்வாய் விழிமுகத் துவமையும் பாரார்
நாடி யேயுடை யவன்பணி யால்பகை நாட்டிச்
சாடி யேகளை வார்உற வோர்ந்திடார் தகைத்தே. 30

## வேறு

மள்ளர்தம் மிகுவெள் ளம்போல் வளர்முதல் வலையம் போலக்
கொள்ளவார் குரல்முன் தோன்றிக் குஞ்சரக் குழாத்தி னூடு
விள்ளிரதம் போல வாய்ந்து வெம்பரத் திரள்மு கம்போல்
தெள்ளுநெற் கதிர்க விழ்ந்து சிறந்தன சாலி யெல்லாம். 30

பேரின்பத் தமுதுண் பார்கள் பேணிய விளைவு போலும்
நாரியர் பருவம் கண்டு நசைஉணர் வகைந யப்பால்
சாரியும் ஈரைந் தாம்பூ ...விளை வறிந்து சார்ந்து
சேரின்ப விளைவும் போல விளைந்தன செந்நெற் சாலி. 31

வண்டொலி நீலம் ஆம்பல் வனசமும் படவ ரிந்து
கண்டரிச் சும்மைத் தாக்கிக் கதிர்வரை எனப்போர் செய்து
கொணடுவை களைய மேதி ஏறுடன் குமையத்தூற்றி
எண் தொகு சாலி பந்தி ஏற்றியே இல்லில் உய்ப்பார் 32

வண்டொலி நீலம் ஆம்பல் வனசமும் படவ ரிந்து
கண்டரிச் சும்மைத் தாக்கிக் கதிர்வரைஎனப்போர் செய்து
கொண்டுவை களைய மேதி ஏறுடன் குமையத் தூற்றி
எண்தொகு சாலி பந்தி ஏற்றியே இல்லில் உய்ப்பார். 33

புன்னில விளைவுள் ளிட்ட பொதும்பரின் விளைவுங் கானந்
தன்னிடை யவரை தோரை சாதிகள் உளது மற்றுங்
கன்னலு முதலிட் டெல்லாங் கரையிலா வளங்க ளாக்கி
பன்னும்நல் அறங்கள் செய்வார் பகரும் இல் லறத்தி னோரே. 34

அஞ்சுமா றாணை போக்கி அஞ்சுறா தவனி ஆளும்
மஞ்சுறா வுயர்த்த தொன்றற் கஞ்சிலார் என்று போக
வஞ்சுணா வறுசு வைத்தா லஞ்சுநீங் கிடுமூ வர்க்கு
மஞ்சுகா ரணர்க்கும் பூசை யன்புட னியற்றி வாழ்வார். 35

### வேறு

சரிதை மெய்பெற நிலம்பெறத் தாழ்விலா தாற்றிக்
கிரிகை நன்முதற் குறுவிரைப் பூக்கிளர் யோகம்
புரிகை கால்வழி அன்பின்நீ ராற்புலங் கரந்து
வருகை ஞானம்போல் அமுதுண்டு மகிழ்சிறந் திடுவார். 36

### வேறு

அன்பர்கள் உற்ற போதில் அடிபணிந் தஞ்சி யேசூழ்ந்
தின்பம்உற் றினியபேசி இன்சுவை அமுத ருத்தி
பொன்புனை ஆடை நல்கிப் போற்றுவார் பொருநை சூழ்ந்த
நன்பதி உற்ற மாந்தர் நாள்தொறும் நயத்தால் மாதோ. 37

### வேறு

நீடு நல்அறம் இயற்றுவோர் நீள்மறு கெங்கும்
மாட மாளிகை உபரிகை மந்திர மகங்கள்
நாடு சாலைகள் நாவலோர் பட்டிமண் டபங்கள்
பீடு தங்கிய பெருமதிச் செல்வங்கள் பிறங்கும். 98

பொருள் இரண்டினில் அளகையோன் தேயலால் பொருள்கள்
வரும்இ ரண்டுமின் னாட்டுள மற்றிதற் குவமை
தெருளும் யோகரால் தேவரால் திரிபுவ னத்தும்
துருவி னும்கிடை யாதுற்றோர் புண்ணிய சுதரே. 39

மலைஒன் றேறிய வண்டுகள் பாடுவ மைந்தர்
கலைஒன் றேறிய கலவிகள் கழறுவ காதல்
வலைஒன் றேறிய மவுணரை நோக்குவ மாதர்
அலைஒன் றேறிய பாகுசெய்ப் பாய்ந்திடும் அயலே. 40

### சோலைவளம் இது மாத்திரைப் பெருக்கம்

ஒன்று நீங்கிய மாகத்தை ஆற்றுவோர்க் குவந்தே
ஒன்று நீங்குகா னகம்தனை உதவிடும் கடுக்கை
ஒன்று நீங்கிய வாரியின் இசையினுக் குவப்பாய்
ஒன்று நீங்கிய மகரந்தம் தேமலர் உகுக்கும். 41

### இது மாத்திரைச் சுருக்கம்

மருதம் மேவிய கிளிமறை ஓதுவ பூவை
சுருதி கூட்டுவ சொற்குயி லாம்எனச் சோலை
கருதி யேசிரம் கம்பிதம் செயஎனக் கண்ணீர்
சொரியும் வேங்கைகள் சொனம்தரும் செம்மலால் துணிந்தே 42

கோல மென்மலர்க் கொம்பராம் வனிதையர் குழைந்து
தாலம் பங்கயத் திலைகொடு தளிர்க்கையால் சார்ந்து
நீல நிம்பமுத் துடனிராஞ் சனங்கள்சென்னி ராடி
சாலும் போதுறு மணந்தவர்க் கியற்றுவ சாலை. 43

திங்கள்வெண் குடைநி ழற்றச் செறிகந்தி கவரிவீச
மங்கலம் குயில்இ சைப்பக் காமரம் இசைப்ப வண்டு
பங்கயங் களாசி ஏந்த முழவம்பைந் திரைகள் ஆர்ப்ப
ஐங்கணை வசந்தன் காவில் அரசுவீற் றிருத்தல் மானும். 44

வண்டு பாடுவ மயில்விரித் தாடுவ குயில்வாய்
விண்டு நேரிசை கூடுவ ஆம்பல்வாய் விள்வ
கெண்டை நேர்விழி உற்பலம் காட்டுவ கிளர்ந்து
கண்டெ னும்சொலார் பயில்அரங் கிசையுமக் காவே. 45

மலரின்தண் டலையை நோக்கி மன்னிய கருமே கங்கள்
கலைமதி முகத்தி னார்தம் கூந்தலைக் கவர்ந்தீர் என்னத்
தலைஅசைத் தன்னார் ஓதி தன்னைநீ ரேக வர்ந்தீர்
அலரென நாணம் உற்றே அந்தரத் தேகிற் றன்றே. 46

## வேறு

வரைவளர் குறிஞ்சியும் வனம்கொள் முல்லையும்
கரைஇலா வளம்தரு மருதும் கம்பலைத்
திரைதரு நெய்தலும் செறிந்த தன்பொருள்
தரைஎலாம் மயங்கிய தன்மை சாற்றுவாம். 47

குறிஞ்சியின் தேன்களும் கொல்லை மூவினத்
துறும்ததி பால்களும் மருதம் ஓங்கியே
சிறந்திடும் கன்னலு மறத்திற் சிந்திய
நிறம்தரு நீர்களும் உவரி நீத்ததே. 48

தேனுடன் தினைகளும் செலுத்தி முல்லையிற்
கானவர் கொள்ளுடன் கள்ளும் கொள்வன
நானமும் தேரையும் நல்கி ஆயர்கள்
மானிலத் தெரிசனஞ் சென்னெல் மாறுவார். 49

பண்ணும் சந்தில்வாழ் அறுபதம் குறிஞ்சியாழ் பழனப்
பொன்ன லர்த்திய தாமரை வண்டுக்குப் புகன்று
துன்னும் கம்பலை யாழினைப் பயிலுவ தோகை
அன்ன பார்ப்பினுக் கடைகிடப் பனஅளிக் கயலே. 50

மேதி சாரலில் தினைதறித் தம்மடு மேவிப்
போது லாம்அறல் உழக்குவ போதகம் மருதில்
தீதி லாக்கழை குதட்டியே தேம்பொதி சோலைச்
சூதம் மேவியே முறச்செவி துளக்கியே துயிலும். 51

பாறு மேவிய பாலைமுல் லைச்சிறார் படர்ந்து
சூறை ஆடுவ குறிஞ்சியிற் சூறைமா ருதம்போல்
வீறு சான்றிடு மீளியும் விடலையும் நாகத்
தேறி யேபடர் கறியினை எறிந்துகுப் பனவே. 52

வேலை மேவிய துவர்க்கொடி சந்தன விருக்கத்
தோலை மேவியே படர்வன மருதமாம் துறையும்
சீலர் சாடிய சிற்றிலால் வெகுண்டழச் சிறுமின்
பாலர் மேல்அணி முகத்தினைப் பரிந்தெறி வனவே. 53

நெய்த லங்களிப் பரத்தியர் கொடிச்சியர் நேர்ந்து
துய்ய முத்தினுக் கெடைக்கெடை ஏனலைச் சொரிவார்
மைய ஓதிய உழத்தியர் முல்லைமா தர்பால்
தொய்யி லால்எழு துவமுலைச் சுவட்டினைப் பார்த்தே. 54

மாது எங்கனி விளத்தை மாதரார்
காது வேற்கண்ணி னைக்கவர்ந்த நீயென
ஓதிடில் ஆதனம் உனக்கும் உண்டெனத்
தாதுக நாணொடும் தலைக விழ்ந்ததே. 55

கும்பம் போன்ற காய்க்கு ரும்பையின் தாழையைக்
கூந்தல் என்றுயர் போந்த
அம்பல் பேசுவ கவர்ந்தனை யன்னலார்
முலையை என்றதை நாடிக்
கும்பம் என்றுயர் தாழையும் அவர்குழல்
கவர்ந்தும் கட்டறியாய் என்
றும்பர் ஓங்கியே தலைஅசைத்திடு
..வன ஓங்கியே உய்யாமை 56

## வேறு

வரிச்சு ரும்பு வயிர்இசை வந்துலாய்
விரிக்குஞ் சாமர மேகம் எதிர்புகை
செறிக்குந் தோகை அரம்பையர் சந்தனக்
கிரிக்குள் ஈசன் பவனி கிளைக்குமே. 57

வேள்வி யின்புகை வேடர் புனத்தெறி
காழ கில்புகை கங்குலைக் காட்டுவ
நீள்சி னைப்பணை முத்த நெடுவரை
சூழ்ம ணிக்குலம் சொற்பகல் காட்டுமே. 58

அருவி ஓசையும் ஐவனம் தூற்றுவோர்
கருவி ஓசையும் கானம்செய் காமரம்
மருவி யாழ்செயும் ஓசையும் கண்டுவான்
உருமின் ஓசை ஒதுங்கிடும் உட்கியே. 59

கயிலைநா யகன்புடை மருதக் காவினில்
நயமுடன் இருத்தலால் நம்பன் வில்எனும்
வயமுறு மேருவே பொதியம் வந்திழி
பயன்மலி பொருந்தமே பரந்த கங்கையே. 60

அகத்தி யனிறை சாகத் தணிந்துறு
மகத்து வவான்நீர் வரும்பொ ருந்தமே
சகத்தியல் கடந்தவர் சாரும் நீர்மையால்
சிகைத்தனிப் பொதிகையே கயிலை செப்பவே. 61

அங்க் யற்கணாள் தனைப்பாணிப் பட்டதும் அமலன்
மங்கை யோடுயர் திருமணக் கோலத்தை மலையும்
தங்கு மாதவற் கருளிய தன்மையும் தமிழால்
பொங்கு வேதமும் பொலிந்திடு கிளர்ந்ததிப் புவியே. 62

மகத்து வம்பெறு பொதிகைநாட் டினுக்குப மானம்
சகத்தில் வேறிலை அதன்பயன் முழுவதும் சாற்ற
அகத்தி யற்கிணை யானபேர்க் கும்அரி ததனை
இகத்தில் யான்சொல முடியுமோ இயன்றவா றிதுவால். 63

-நாட்டுப்படலம் முற்றும்-
ஆகத்திருவிருத்தம் 137

## நகரப்படலம்

பொதிகைநாட் டியல்பினைப் புகன்று மற்றதின்
அதிகம்ஆ கியதலம் ஆன பதிக்கிணை
மதிபுனை சோலைசூழ் மருத மாநகர்ப்
பதிவளம் இயன்றவா பகரல் உற்றனம். 1

புண்ணிய வனிதையும் புகழ்செய் மங்கையும்
தண்அளி அன்பெனும் சரதப் பேதையும்
பண்அமர் நீதிநூல் பருவப் பாவையும்
நண்ணிய தலம்மண நகரம் என்பவே. 2

கடல்நெடுந் துகில்உடைக் கன்னி நாடெனும்
மடமகள் தனவரை வயங்கு மாலையே
தடநெடும் பொருநையூர் சார்ந்த மாமணி
நடுமணி மருதமா நகரம் என்பவே. 3

சாகரம் வேலியாம் தரணி பொன்னிலம்
பூகதம் சூழ்வயல் பொருந்த நாடதில்
வாகுசேர் கன்னலாம் வளங்கொள் ஊரதன்
பாகுசேர் கட்டிமா மருதப் பாடியே. 4

பாருடைக் காஞ்சியே அறம்ப லித்தது
சீருடை அளகையே பொருள்சி றந்தது
தாருடை வானமே போகம் சார்ந்ததாம்
ஏருடை முத்திவீ டிவ்அ ருச்சுனம். 5

அத்தலம் மூன்றினும் அமைந்த தொவ்வொரு
வித்தகம் இந்நகர் விரும்பு வோர்பெறு
நித்திய அறம்பொருள் இன்ப நீர்மையும்
உத்தம மோட்சமும் உறுவ திந்நகர். 6

இந்நகர் சிவநகர் என்ப மானத
நன்னதி பொருநையே நதியின் பாங்கர்வாழ்
பொன்னணி கற்பகம் புடைஅ ருச்சுனம்
மன்னிய நாயகன் மருத வாணனே. 7

சொல்வளத் தாரகச் சுருதி வாய்மையும்
நல்வித சாதன நலத்தை ஈவதும்
கல்வியைத் தருவதும் கவலை தீர்ப்பதும்
செல்வம்மே வியபுடை மருதச் சேத்திரம். 8

செய்ய பூமகள் சேர்ந்தசெந் தாமரை
துய்ய பூமகள் சோதிஅம் போருகம்
சையம் ஈன்ற மகள்இம யாசலம்
வையம் ஏத்தும் மருதெனும் மாநகர். 9

படியில் மிக்க மருதெனும் பைந்தொடி
வடிவிற் சூழ்ந்திடும் காஞ்சிவ ளந்திகழ்
கொடியில் பூத்த குலமலர் கொய்தளிர்
கடிகொள் காவும் கழனியும் காட்டுமே. 10

ஆர ணத்தொடெண் எண்கலை ஆய்ந்திடும்
கார ணத்தரும் காமுகர் இன்பமும்
வாரி ண்க்கிய தனமட. வார்களும்
சீரி ணக்கிய செல்வரும் சேர்பதி. 11

எங்கும் செல்வம் நிறைந்திடும் இல்களே
எங்கும் அன்னங்கள் ஈபவர் சாலையே
எங்கும் புண்ணியர் போற்றும் இடங்களே
எங்கும் உத்தமர் எண்ணிலர் என்பவே. 12

வீதி தோறும் விழாஅணி காளையர்
போது சாந்தம் புனைந்துயர் பொன்எனும்
மாதர் மைந்தர் மகிழ்ந்தினி தாய்உறை
ஏதம் அற்றவர் வாழ்பதி எங்கணும். 13

## வேறு

ஆரண விதிகளும் ஆக மங்களும்
காரண ஒழுக்கமும் கருணை அன்பினால்
ஓரணி மனைகளில் விருந்தி யற்றுவோர்
சீரணி முகமனும் சிறந்த வீதியே. 14

மணங்கள் எய்துவ காவும் மனைகளும்
அணங்கு செய்வத கங்களும் மாதரும்
வணங்கிச் சூழ்வன மைந்தரும் சாலியும்
இணங்கு வீதிகள் எங்கணும் இன்னவே. 15

சந்த னம்அகில் சண்பகம் தண்பலா
மந்த ரம்மகிழ் புன்னைநன் மாதவி
கொந்த லர்க்கொன்றை கோங்குடன் கூவிளம்
கந்தி பாடலம் காவுகள் எங்கணும். 16

புன்கும் புன்னையும் பூம்பொரி தூற்றுவ
நன்கு முப்பழ மும்தரு நல்குவ
வின்கு லைக்கமு கம்அரை ஏந்துவ
தென்த திக்குப சாரம்செய் சோலையே. 17

வனங்கள் எய்துவ தாமரை யாம்பலே
வனங்கள் எய்துவ தாமரை யாம்பலே
யனங்கள் எய்துவ சாலை யுவளக
மனங்கள் எய்துவ சாலை யுவளகம். 18

மாக மஞ்சிவர் மாளிகை மஞ்சியே
நாக மிஞ்சிய நன்புற மிஞ்சியே
சோக மிஞ்சிடும் சொல்லெழுத் தஞ்சினால்
மேக மஞ்சனம் வீசிய வீதியே. 19

தோகை வஞ்சி சுருங்கிடை வஞ்சியே
மேக மென்குழல் மின்னார மென்குழல்
பாக ணஞ்சனம் பானற்கண் அஞ்சனம்
வாகு டன்பயில் வீதியே போகமே. 20

அஞ்சு மாறுள தானில வஞ்சுமே
எஞ்சு மாறுமின் னார்இடை எஞ்சுமே
நஞ்சு மாறுமின் னார்விழி நஞ்சமே
கஞ்ச மாதலாத கடிநகர். 21

வளமு லாவு வனசத் திருப்பிதே
வளமு லாவு வனசத் திருப்பிதே
களம ரஞ்செய் கவிதைக் குரல்களே
களம ரஞ்செய் கவிதைக் குரல்களே. 22

அரசர்கள் நடத்துதேர் ஒலியு மன்னவர்
பரிதொடுத் திடுநடை ஒலியும் பாகர்கள்
கரிசெல நடத்துகம் பலையும் கஞ்சமார்
திருவளர் மங்கலம் சிறந்த வீதியே 23

மதிஉ லாவுவ சோலையும் மேலவர் மனமும்
துதிஉ லாவுவ பூகதர் புனிதர்வாய்த் தொகையும்
கதிஉ லாவுவ மருதமும் கந்துக நடையும்
நிதிஉ லாவுவ மனைவளர் நீதியின் நெறியே 24

கொடிஅனார் இடையும்மா ளிகையும் மென்கொடி
வடிவினார் ஓதியும் மறுகும் மாலையே
அடிகளும் மாடமும் அணியும் வெண்பொடி
புடவியர் புகழ்ந்திடு பொன்செய் வீதியே. 25

கானமார் சோலையும் தடமும் கந்தரம்
வானமார் காவும்நன் மனையும் கற்பகம்
தானமர் மேலவர் தையுந் தானநீர்
தூநலர் மேவிய மருதத் தொல்நகர். 26

வனசம் ஆம்பலம் உற்பலம் சைவலம் முகம்வாய்
முனைய வேல்விழி கூந்தலா முல்லையே கோங்கம்
சினைஅ ரம்பைமென் மூரல்தோள் செந்தனங்குரங்கா
நனைய சண்பகம் மேனியா மருதநா யகிக்கே. 27

மல்லிகை குவளைசெவ் வந்தி மாமருப்
பில்கிய பித்திகை வாச்சி பிச்சிமென்
முல்லை கேதகை வளைமுடித் துலாவிய
செல்வளர் சிகழிகை மருதச் செல்வியே. 28

பண்ணிய லாள்பயில் பதுமச் சேக்கைபொன்
மண்ணிய மேல்நிலைப் பதியின் மல்கிய
எண்ணிலாக் கொடிகளும் இலங்கி ஆடுதல்
விண்ணவர் கருடர்வ ழைக்கு மேன்மையே 29

பளிங்கி னால்செய்த பதியின்மேல் செம்மணிப்பத்தி
வளங்கொள் மேல்நிலை தனில்பயில் மகளிர்கள் வழங்கல்
தழங்கு நீரில்செந் தாமரை மலர்களில் சார்ந்து
விளங்கு கின்றசெந் திருக்கள்வீற் றிருப்பது விளைக்கும். 30

தழையும் கும்பமும் மாலையும் கயல்தருப் பணமும்
கழையும் சங்கமும் கொடிகளும் காட்டிய வீதி
குழைமென் கொங்கைமே கலைவிழ கொடிறுதோள் கண்டம்
இழைஇ லங்கிடை மங்கல மகளிரை இணையும். 31

விழவ றாதன வீதியும் சோபனம் மேவி
மழவ றாதசம் பன்னஇில் லங்களும் வயலில்
உழவ றாதபைம் போகமும் உலப்பிலா தோங்கு
முழவ றாதது முன்னவன் கோயில்அம் மூதூர். 32

தோரண நிரைகளும் துழனி ஆடுவோர்
காரண நிரைகளும் கந்து சீறிய
வாரண நிரைகளும் வாசிப் பந்தியும்
தேரணி நிரைகளும் சிறந்த வீதியே. 33

சொற்படு கலைகள்தேர் தொகையின் செல்வரும்
பொற்புடை நிதியரும் பொருந்தும் வேள்வியால்
அற்புடை ஆடவர் அன்றிச் சேர்கலாக்
கற்புடை மகளிர்வாழ் கவின்கொள் வீதியே. 34

விஞ்சையர் மகளிர்பால் வேசை மாதர்கள்
மிஞ்சிடப் பாடியே வீணை வெல்குவார்
வஞ்சியர் ஊடலால் அவுணர் மார்பமும்
குஞ்சியும் பஞ்சடிச் சுவட்டுக் கோலமே. 35

## வேறு

மின்னுருப் பொலிந்த மங்கை யார்கள் வெம்மை மைந்தர்மேல்
கன்னல்வேள் சரங்களான கண்கள் மூரல் வதனமே
அன்னபோதி னால்அடர்த்தும் அனையர் கொங்கை யானையால்
துன்னுமார் பகம்பொரச் சுரந்த காமம் மூழ்குவார். 36

## வேறு

மாதர் காம வலைப்படு மைந்தர்கள்
தூதி யங்கும் தொழிலரைப் போற்றுவார்
பேதை யார்பணி பேணுவர் பேதையார்
கோதை அங்கம் புகழ்வர்கொண் டாடுவர். 37

அன்ன மென்நடை யாருடன் ஆடவர்
மின்னு மேகமும் மேவின தொப்பவே
மன்னு தண்சுடர் முற்றமஞ் சத்தினில்
கன்னல் பால்கலந் தென்னக் கலப்பரே. 38

முத்தம் தாஎன மோகமின் னார்களைச்
சித்தம் ஒன்றிச் சிறுகலை பற்றியே
நத்தி நத்தி நயந்து நளினத்தில்
அத்தம் சேர்த்தி அணைகுவர் ஆடவர். 39

அன்ன பான்மையர் இன்னிசை யாழ்வலோர்
மின்ன னார்பயில் ஊடல் விலக்குவோர்
இன்ன லார்விடு தூதின் இயங்குவோர்
முன்னி ஆவணம் எங்கணும் முற்றுவோர். 40

## வேறு

வேளை வென்ற மைந்தர் தம்மை விரக மான பார்வைசேர்
வாளை வென்ற கண்களால் வலைப்ப டுத்து மாதர்கள்
தோளை நவ்வி யேதி ரிந்த சுரதசீலர் கள்பின
னாளைஎன்றி ராதுசுனம் நாட்டுவார் அனேகரால். 41

விழவுகண்டு மைந்தர்மாதர் மிகமகிழ்ச்சி எய்துவார்
குழைகள் காஞ்சி பணிகள் இன்ன புதியகோல மேசெய்வார்
புழகிதம் கொளச்சுகந்த களபமும் புனைகுவார்
அழகம்நீவி ஆடிநோக்கி அழகுசெய்த மைப்பரால். 42

கோல வாய்முலை யும்கோவை முத்தமே
குமுத வாய்முலை யும்கோவை முத்தமே
மேலும் மாதர்கை வண்டுகள் ஆடுமே
விரிம லர்தொறும் வண்டுகள் ஆடுமே
சோலை யாவும் மயில்கள்உ லாவுமே
சூரர் கையு மயில்கள்உ லாவுமே
மாலை நேர்குழல் மாலைவ னங்களே
மருத மெங்கணு மாலைவ னங்களே. 43

சோலை யெங்கு மணியுங் குழைகளே
தோகை யாரணி யும்பொற் குழைகளே
ஏல வார்குழல் சாயல்க லாபமே
இலங்கு மின்னிடை மேலும்க லாபமே
காலி சைந்த சிலம்புப யோதரங்
கால சைந்த சிலம்புப யோதர்ஞ்
சாலுஞ் சீர்மலர் சூழு மருச்சுனச்
சம்பு மேன்மலர் சூழு மருச்சுனம். 44

மணந்த வர்வர நாட்டந் தழைத்திடு
மறுகி லக்கண நாட்டந் தழைத்திடும்
புணர்ந்த மாதர்கண் வேலைக் கடுக்குமே
போது லாங்குளம் வேலைக் கடுக்குமே
இணங்கும் யோகர்க்கு நண்பாந்த வந்தரு
..ன கிழைஞர்க்கு நண்பாந் தவந்தரு
மணங்க னாரித ழாம்பலந் தந்திடு
மரும கத்தினர்க் காம்பலந் தந்திடும். 45

கழனி மாதர் கமலங் களையுமே
கருது பாவங் கமலங் களையுமே
விழவ றாதன காவண மெங்கணும்
விரித லையதெங் காவண மெங்கணு
மழவ றாத வளங்கொள் மனைகளே
மகளி ராடு கழங்கம் மனைகளே
அழகு மேவிந் திரதரு வார்பதிக்
கன்பு மேவிந் திரதரு வார்பதி. 46

நலந்தரு வீதியின் நாள்தொ றும்புரி
பலந்தரு வளங்களைப் பகர்ந்த னம்இனிக்
குலந்தரும் அந்தணர் முனிவர் கொள்கைசேர்
தலந்திகழ் ஆவணப் பெருமை சாற்றுவாம். 47

## வேறு

ஒருமை யாளர்இருபிறப்பர் உதவு மூன்று நூலினார்
அருமை நான்கு வேதம் ஓதி ஐயராகி அறுதொழில்
பெருமை யோர்கள் எழுகடற் புவிக்குள் எட்டு பிறைவையைத்
தருசு டர்க்க ருக்கியம்செய் சந்தியா பனத்தரே. 48

மகவ ளர்க்கும் நீரதென்ன மகம்வ ளர்க்கும் மாண்பினால்
அகன்நெ கச்செய் தவியைவா னவர்க்க ருத்தும் அன்பினார்
பகவ னுக்கு வந்து பூசை செய்கு வோர்கள் பதுமன்நன்
முகம திற்பி றந்து வாழும் முனிவர்வீதி இவணதே. 49

முஞ்சி நாணர் தோல ணிந்த நூலர்முண்ட கத்தொடைக்
குஞ்சி வாய்ந்த குடுமியார்கள் குரவ னைப்ப ணிந்துபின்
அஞ்சி நூல்ப யின்றட ங்கி ஆர ணப்ப குப்பினை
விஞ்சு சந்தை கூட்டி ஓதி மேவி டங்கள் எங்குமே. 50

குண்டி கைக்கை முண்டி தத்தர் கோல நீறு தாங்கியே
புண்ட ரத்தர் மணிஅ ணிந்த புனைகல்லாடை தாங்குவோர்
தண்டில் வைத்த கோவ ணத்தர் தரணி விட்ட ரன்தனைக்
கண்டு பெற்ற மவுனம் உற்ற காட்சி யாரும் அவணதே. 51

முற்று றந்த மோன யோகர் முழுதும் வைதி கத்தினார்
கற்ற நூலர்க் கன்பு வாழ்வு கந்த போதர் காலினைப்
பற்றி யேஅ டக்கல் உற்ற பரிவுகண்ட ரன்தனைப்
பெற்று வேறு காண்கி லாத பெருமை யோரும் இவணதே. 52

## வேறு

சரிதையே முதல்இ யற்றிச் சாயுச்ய வாழ்வு பெற்றோர்
விரதியர் ஐந்தும் வென்றோர் கோபத்தை வெறுத்த மெய்யர்
பருதிபோல் இருள கற்றிப் பரப்பிய யோகச் சோதி
மருவிய மாண்பின் மிக்கார் மன்பதை ஒத்து வாழ்வார். 53

## வேறு

அந்தணர் முனிவரர்க் கமைந்த வீதியின்
சுந்தரம் உரைத்தனம் வாகை யந்தொடைச்
சந்தமார் புயமுடை சத்தி ரிக்குலம்
வந்தமன் னவர்திரு மறுகு சாற்றுவாம். 54

## வேறு

உலக நீதிமன் னவர்கள்செங் கோல்முறை உய்க்கும்
அலத ராதல மன்னர்கப் பங்களும் பன்னூல்
கலைகள் ஆய்ந்தவர் கல்வியின் செல்வமும் காக்கும்
அலகி லாதநல் அறங்களும் மந்திரர் அமைச்சும், 55

ஆட கம்பயில் சாலையில் அம்புநேர் விழியார்
நாட கம்பயில் நூல்முறை நாட்டிய சிறப்பும்
நீடு மாந்தரும் நிதிக்குவை அடுக்கலும் நெறிநூல்
பீடு சான்றவர் சூழும்அத் தரணியில் பெருகும் 56

சிலைப யின்றிடு கழகமும் சேர்படைக் கலத்தால்
கொலைப யின்றிடு வென்றியும் வீரர்கள் குழுவும்
மலைப யின்றதேர் நடத்திடு மைந்தரும் வாரி
அலைப யின்றெனும் துரங்கசா லையில்அணி வகுத்தே. 57

மனமெ னச்செலும் வாசியைச் சாரியால் கதியால்
வினையி னால்பரி வேடம்ஒத் திடவிளை யாடி
முனைய வெலவார்..............................க முனைப்போர்
தனைஉ ஞற்றுவார் வாரணம் பெருதிடத் தளைவார். 58

கூற்றெ னச்செலும் கறையடி உகைக்கமேல் கொதித்துக்
காற்றெ னச்சுழல் புழைக்கையால் முகிலினைக் கசக்கி
ஏற்றநன் னீர்குடித் துக்களி மும்மதம் எய்து
தூற்று மாவினை நடத்துவோர் வீரமும் தயங்கும். 59

இத்த கைத்தரு மறுபுலச் சொல்அரும் இயற்சொல்
முத்த மிழ்க்குல வேந்தர்களுடன் குழுவுடன் மொய்த்த
பித்தி கைத்திரு மாடமும் கூடமும் பிறங்கும்
சத்தி ரிக்குல மன்னர்கள் ஆவணச் சார்பே 60

**வேறு**

முன்னைமாற் றவள்பழித்த மொழிபழுதாய் அவள்நாண
வன்னியுடன் கிணறுலிங்கம் மதுரைதனில் அழைப்பித்த
பொன்னையாள் அவதரித்த புகழ்ஓங்கும் வணிகர்குல
மின்னுமா ளிகைசெறிந்த வீதியினை விளம்புவாம். 61

**வேறு**

மின்திகழ் மணிப்பூண் நாய்கர் வெறுக்கையின் மணிகள் வேறு
துன்றுபல் வண்ணத் தூசு சுவைதரும் பொருள்கள் ஈது
சென்றுகொள் பவர்கட் குள்ளம் செவிகளில் அமுதம் ஊறத்
துன்றிய பரிசு கூறிச் சொல்லினும் இலாபம் கொள்வார் 62

மன்றல்ஆ வணம்எலாம் கரும வார்த்தையே
தென்றலான் கணைபொரச் செல்வழிப் ....
பொன்திகழ் முலையினார் புணர்ப்பின் ஆடல்போல்
சென்றகண் பொருளின்மேல் திரும்பி டாதரோ. 63

**வேறு**

ஐந்திணை நிலத்தில் உள்ள அரும்பொரு ளான யாவும்
சுந்தர வளம்சேர் மாடம் துன்னிய உடுக்கள் போலும்
சந்தமார் மணியின் கோவை சார்ந்தொளி வீசு கின்ற
திந்திர வில்லின் தோன்றும் வைசிகர் வீதி ஈதால். 64

அறையும்ஈ றாரீ ரெட்டால் ஐந்துறா தவனி காக்கும்
இறைஇறை போக நின்ற ஏர்வளப் பொருள்கள் எல்லாம்
முறைஒக்கல் பிதிர்த்தான் தெய்வம் முனிவரர் விருந்துள் ஆர்க்கும்
குறைவிலா தளிக்கும் வேளாண் குலத்தவர் மறுகு ரைப்பாம். 65

செயல்வினை உழவின் வேளாண் செய்கையின் திறத்தி னாலே
இயல்புடை மூவர் தம்முள் இருபிறப் பாளர் தம்மைத்
தயவினால் அறுதொ ழிற்கும் தவறிலா காத்தி றைக்கும்
புயல்என ஈந்து காத்தும் புவியினை வளர்க்கும் நீரார். 66

வணிகர்க்கு வாணி பம்செய் வகைப்பொருள் ஈந்து காத்தும்
பணிதக்க பெரியோர் தம்மைப் பரிவினால் பாது காத்தும்
மனிதர்க்கா பரணம் என்ன இரும்புகழ் தரித்தே அன்பாய்த்
துணிவுற்ற அரசற் கான மந்திரித் தொழிலும் செய்வோர் 67

பொருவிலார் உற்ற போதில் பொள்ளென எழுந்தி ருந்து
பிருதுவி மீதில் தாழ்ந்து சூழ்ந்துபே ரின்பம் எய்தி
வரும்இவர் நம்மைக் காக்கும் மாதொரு பாகன் என்றே
அருமையால் அன்னம் சொன்னம் அளித்தவர் ஆசி ஏற்பார். 68

இருக்கறை விதியை நீங்கா தியற்றுவோர் இல்து றந்த
கருத்தரைக் காக்க இல்லம் கருதுவோர் கைம்மா றின்றி
வருத்தம்உற் றாலும் ஈவோர் வணக்கத்தார் வாய்மை காப்போர்
அருத்திஇவ் வண்மை யானோர் வீதியின் அணிகள் ஈதால். 69

### வேறு

பண்ண யந்த ரப்ப கர்ந்து பாடு கின்ற பந்தமும்
உண்ண யந்த ரக்க னிந்து லாவு கின்ற உவகையும்
கண்ண யந்த ரக்க லந்த காதல் உண்மை காட்டியே
நண்ணும் வேசை மாதர் மேவு நளின வீதி நவிலுவாம். 70

சித்தி ரத்தி னும்செ றித்த தெற்றி வைத்த பாவினும்
பத்தி ரத்தி னும்க லந்த பாவை யாரும் மைந்தரும்
முத்தம் வைத்தி டப்பொ றித்த முன்றில் கண்ட மோகர்கள்
வைத்த சிந்தை ஈர்ந்தி டச்செய் மாதர் மாடம் எங்குமே. 71

ஆசை வைத்த மைந்தர் தம்மை ஆடை ஊட்டி அந்நலார்
பாசம் வைத்த இவர்எனப் பரிந்த சிந்தை யோடழாய்
நேசம் வைத்த காமிகத்தர் நிலவு சொர்க்கம் இதனிலும்
பேசி டச்சி றந்த சொர்க்கம் எதுஎ னப்பி தற்றுவார். 72

சூதம் மேவு சோலையில் சுலாவு கின்ற தீயளிச்
சூதம் நேரும் விழியி னார்கள் தோள்ந யந்த கேள்வர்பார்
சூத னுந்த னங்கள் ஈந்து சுகமுறும்த னத்துடன்
சூதி ணங்க ஆடி வென்று தொகைபடும்தனங்கொள்வார். 73

### வேறு

அலகிலா துலகில் சாதி நான்கில்அவ் வருக்கம் இன்றி
நலமிகும் உயர்ந்த சாதிக் கிழிந்தபெண் நலிந்த ஆணுக்கு
இலகிய உயர்ந்த மாதர் ஏற்பவும் இரண்டும் கூடி
நிலவிய பலவாஞ் சாதி நெறிகொடு நிகழும் மாதோ. 74

அந்தந்தப் பகுதி அன்றி ஆச்ரமம் நான்க தாகி
பந்தமாய் உறைவோர் எய்தும் பதிகளும் உளது பாரில்
இந்திர லோகம் என்னும் எழில்புடார்ச் சுனத்தின் கீர்த்தி
தந்துமுற் றுரைக்க நானோ வல்லவன் சாற்றும் காலே. 75

-நகரப்படலம் முற்றும்-
ஆகத் திருவிருத்தம் 212

## தலவிசேடம்

அம்பரம் அம்பர மாகச் சூழ்கின்ற அம்புவியில்
உம்பர் தொழும் புகழ்உடுத்த தமிழ்நாட்டில் உயர்ந்(த)நறும்பூங்
கொம்பர்சூழ் புடைமருதம் குலவிவளர் புண்ணியமே
விம்பமுறு தலவிசேடப் பெருமை விளம்புவாம் 1

ஆதியில் ஒருகா லத்தில் அவனியே முதல யாவும்
ஓதமாம் கடலில் மூழ்க உகமுடி வுற்ற காலைச்
சீதமார் பிரள யத்தில் சிதைவிலா தித்த லத்தை
நாதன்கைச் சூலம் தன்னில் நாட்டினான் வேத நாடன். 2

நாதன்தன் இடத்தொ டுங்கும் நாரணன் முதலோர் தம்மில்
போதனை அழைத்து முன்போல் புவிகளைச் சிருட்டி என்ன
வேதனும் படைக்கல் உற்றான் மேதினி முதல யாவும்
ஈதனில் முனிவோர் தோன்றி இருவினைக் கெண்ணில் தோற்றம். 3

வந்திடும் அவாவும் சாதி நான்கில்ஆண் பெண்மற் றுள்ள
தந்திடும் குலம்அ னேகம் சார்ந்திடும் உயிர்கட் கெல்லாம்
பந்தமாம் தொழிலும் மற்றைப் படைத்திடு நூலும் அன்றி
முந்தும்ஆச் சிரமத் தோர்க்கு முறைதரும் விதிவி லக்கும், 4

தருவது வேதம் அன்றி வேறில்லை என்று தாம்செய்
தருமமும் நூலே அந்த மறைதனைக் கருதிக் காணத்
துருவிடும் போதில் எங்கும் தோண்டிடா வகையினாலே
பரமன்பால் கயிலை தன்னில் பவுடிகம் பெறுமோ மென்றே. 5

தவத்தினைப் புரிந்தார் ஈசன் முனிவர்பால் சார்ந்து நீவிர்
புவிக்கணே வேதம் நான்கும் புடார்ச்சுனம் முதலாய் நின்று
நவிக்கரன் தனைப்பூ சித்து நண்ணிய ததனை அந்தச்
சிவத்தலத் தினிலே சென்று பெறுகெனச் சித்தர் எல்லாம், 6

பூதலம் அதனில் வந்து புடைமரு தரனைப் போற்றி
வேதம்நான் கினையும் பெற்று வியந்தனர் முனிவர் என்று
சூதமா முனிவன் சொல்ல முனிவர்கள் துதித்துப் பின்னும்
நாதனை வேதம் போற்றும் நலத்தினை விரிப்பாய் என்றார். 7

## வேறு

ஆதியில் கிருத யுகத்தினில் இருக்கும்
வேதம்மெய் அருச்சுனம் ஆகி
நீதியால் பணிந்தும் திரேதநீள் உகத்தில்
நிமலனைத் தயித்திரிய மதமா
வேதமே ஆம்பிர விருக்கமாய்த் துதித்து
மேயது வாபர யுகத்தில்

ஓதிய சாம வேதவெண் சம்பாய்
உறுதிகொண் டுழைநின்று பணிந்தும். 8

சீர்தர மூன்று யுகத்தினும் போற்றும்
செயலதாம் பொய்செறி கலியாம்
போர்தரு யுகத்தும் அவ்வகை யான
பின்ஒரு வேதமும் முறையே
நீர்தரு வேணி நிமலனைச் சூக்க
உருவினால் பணிவதா நிறைந்த
ஏர்கொள்முத் தருவில் இந்திரன் முதலா
எண்ணிலார் இருந்தவம் புரிந்தார். 9

இவ்வகைத் தாய மூவகைத் தருவும்
பிறப்பிறப் பின்றிஎக் காலும்
திவ்விய வடிவாய்ப் பணிபவர் தங்கள்
பிறவியை ஒழித்திடும் செயலாய்
நவ்விசேர் கரத்தார் அருளையே பொருந்தி
நாள்தொறும் வதிந்திடும் நல்த்தால்
அவ்வியம் அகற்றும் இத்தல மகிமை
யாவரும் அளந்திடற் கரிதால். 10

## வேறு

இன்பமார் மருத நீழல் முத்திஎய் திடம தாகும்
அன்பினால் அதனை ஈவோன் அருச்சுன வாண னாகும்
தென்புவிக் கங்கை கூடும் திருவேணி தீரம் ஆகும்
நன்பத வியதாம் இந்த நகர்த்திரு நாமம் சொல்வாம். 11

## வேறு

சிவநகர் தென்கயிலை சீவன்முத்தி புரம்மணம்சேர்
அவனிதனில் இந்த்ரபுரி ஆம்பிரபதி ஆதிபுரி
தவநகர்தென் பால்காசி தாரகே சுரம்மருதென்
றுவமைஇலாப் பூதிநகர்க் கோதுவர்இன் னும்பலவே. 12

## வேறு

பாவமோ சனம்செய்து பரத்தை ஈதலால்
சீவன்முத்தி யைத்தரும் சேத்திரம் ஆதலால்
ஆவுடை யாள்எனும் அமலை மேவலால்
பூவில்இத் தலத்தினோர் புகலல் பாலதோ. 13

ஆணவம் முதலிய அகற்றும் சீலினி
மாணும்இத் தலத்துமுத் தருக்கள் மற்றிதைக்
காணுவோர்க் கின்பமா ஞானக் கண்ணினால்
பேணுவோர்க் கானந்தம் பெருக்கும் என்பவே. 14

புண்ணியர் சேரும்இத் தலத்தில் போந்திட
எண்ணியே ஓர்அடி எடுக்கில் ஓர்பரி
பண்ணிய யாகத்தின் பயன்உண் டாம்பதி
அண்ணினோர் பெறும்கதிக் களவின் றால்அரோ. 15

### வேறு

பிறவி சாகரப் பெருவெள்ளம் கடப்பவர்க் கிந்த
நறைத ரும்புடார்ச் சுனம்புணை அதிலுறை நாதன்
அறம தாகிய காலினால் செலுத்தியா றரந்தைச்
சிறையை நீக்கியே முத்தியாம் கரையினில் சேர்க்கும். 16

பாவகா ரியர்கட் கெய்தா திப்பதி வதிய முன்னந்
தாவிலாத் தருமச் சார்பால் சார்பவர்க் கெய்தும் முத்தித்
தேவுயர் தலத்தை உன்னிற் செய்பவந் தீரும் சேர்ந்தார்க்
காவன அனைத்தும் நல்கும் அருங்கதி அளிக்கும் மாதோ. 17

இத்தல மகிமை ஓர்கால் இமையவட் கிறைவன் சாற்றும்
உத்தமம் உரைப்பாம் அண்டம் புருடன்தன் உருவம் தன்னில்
தைத்தலம் காசி காஞ்சி காளத்தி அவன்சு வாச
மத்திக ளடுக்கல் மூன்றாம் அருச்சுனம் அவன்கண் ணாமால். 18

இதனில்வண் பொருநை சூழ்ந்த எழில்புடை அருச்சு னந்தான்
முதல்வன்வ லக்கண் ஆகும் மொழிந்தமெய் அவய வத்தில்
அதிகம்நேத் திரமே என்ன அறைவர்அத் தன்மை யாகிப்
பதிதனில் மேன்மை யான இத்தலம் பரமத் தானம். 19

சிமையம்ஆர் கயிலை மூலம் திங்களூர் தினக ரேசம்
அமைதரு அரன்கண் தில்லை தெரிசனைக் கருளுங் கற்போர்
தமைஅருள் காள கததி தாணுவே அருணை தாலத்
திமையவ ருதிப்போா ஆரூர் இலிங்கம்நீ ரானைக் காவே. 20

இவ்வகைத் தானம் எல்லாம் எமதட்ட மூர்த்தம் இந்தத்
திவ்விய முத்தித் தானம் திகழ்உப தேசச் சேத்ரம்
எவ்வம்இல் மருதம் நாமே எனச்சிரம் சாய்ந்து காட்டி
அவ்வகை இருப்போம் காண்போர்க் கடையாள மாகத் தானே. 21

திருவளர் சீவன் முத்தி அருச்சுனம் தெரிசிப் போர்க்கு
கருதுவ எய்தும் சோரக் கலிகவர்ந் திடுமுன் கன்மம்

வெருவுறு மயக்கம் தீரும் விலங்குபேய் பிணிவிலங்கும்
பெருமகிழ் வெய்தும் இம்மைப் பிறப்பின்நல் பேற தாமால். 22

இத்தல மகிமை இவ்வா றறிந்தவர் இடைவி டாமல்
நித்தனை வழிபட் டேத்தி நெடுங்கிரி வலங்கொண் டுள்ள
சித்தம்அ தான மோன சிந்தனை உடைய ராகி
முத்தியை எய்தி நின்றார் பெறுபலன் மொழியற் பாற்றோ. 23

என்றிறை அருளிச் செய்த எழில்புடை மருதம் என்னும்
நன்றிசை பெற்ற மூதூர்க் குவமையா தென்று நாடில்
மன்றல்அம் போதனாலும் வழுத்துதற் கரிய தான
மின்திகழ் மாடம் ஓங்கும் சிவன்நகர் என்பர் மேலோர். 24

கருமத்தால் பாடல் ஆடல் காட்சியால் கலவி மாதர்க்
கொருமித்த மனத்தால் வெய்யோன் உமிழும்ஆ தவத்தால் பெய்யும்
வருடத்தா லேனும் இந்த மருதில்மாத் திரைப்போ தேனும்
நிருமித்து வதியப் பெற்றோர் நிருமலன் கயிலை நீங்கார். 25

பொன்னினைக் கொடுவந் தேனும் புண்ணியம் விரும்பி னோர்கள்
இன்னல்கூர்ந் திருந்தானாலும் ஏவல்யார்க் கியற்றி யேனும்
துன்னிய சுமைஏற் றானும் சூழ்ந்தையம் ஏற்றா னாலும்
மன்னுதா ரகத்தை நல்கும் இந்நகர் வதிய வேண்டும். 26

பன்னிஇத் தலத்தில் செய்த பாவபுண் ணியம்இ ரண்டும்
தன்னிலே மிகுதி யாகும் வேறொரு தலத்தில் செய்த
துன்னிய பாவம் இங்குத் துகள்கண்ட சூறை போலும்
மன்னுவோர் வினைகள் ஓட்டும் தண்டத்தின் மகிமை தானே. 27

காசியே அயோத்தி மாயை முதலிய கதிசேர் கின்ற
வாசமார் பதிகட் கெல்லாம் மகிமையாய் வளம்பெற் றோங்கி
நேசமாய் அருள்சேர் கின்ற நிருமல உலக மான
பேசுவோன் நகரம் ஈதைப் பேசுவோர் பிறப்பற் றோரே. 28

## வேறு

பத்தி யும்தரும் பண்பும் பரிவும்நல்
புத்தி யும்தரும் புன்மை அகற்றிடும்
சித்தி யும்தரும் சீவன் மருவிய
முத்தி ஆன புரம்இதை முன்னிலே. 29

இத்தலத்தில் யார்ஒருவற் கேனும் அன்னம்
ஈதல்ஆ யிரம்எதிகட் கீந்த பேறாம்
நித்தமும்எத் தலத்தினிலும் வதியும் பேறோர்
நிசியில்இவண் வதிபலனாம் இங்கு நீங்கா
உத்தமநல் உயிர்மற்றும் இலிங்க ரூபம்
உரைசெபமாம் உலவுநடை வலம்அ தாகும்

வித்தகர்க்கூண் செயல்வேள்வி விருந்து காப்போர்
விரும்பும்உப சாரம்எலாம் விமலன் பூசை. 30

பொருநையில்இந் திரமோட்சம் படிந்துபுடர்ச் சனம்பரவிப்
போந்து கோயில்
மருவிவலம் செய்துமையை மழுவலா னைப்பணிந்து
மனுவை ஓதிக்
கருதிவரு பெரியோர்கள் உடன்கூடித் துதிகூறிக்
கணப்போ தேனும்
மருதமுத்தித் தலத்துறுவோர் வானமுத்தித் தலம்நீங்கா
மகிமை யோரே

-தலவிசேடம் முற்றும்-
ஆகத் திருவிருத்தம் 243

## தீர்த்த விசேடம்

முத்தலத் தினுக்கு முதல்தலம் சீவன்
முத்திய தானஇத் தலத்தின்
உத்தமம் உரைத்தாம் முத்தர்கள் வலமாய்
உலவியே உயிர்களுக் கினிதாய்ச்
சித்திதந் தடைந்தோர் செய்வினைப் பவங்கள்
அனைத்தையும் சிதைத்தருள் சிறந்த
வித்தகப் பொருளை விளங்கிய தீர்த்த
விதிவிசே டத்தினை விரிப்பாம். 1

ஆதியில் புடைசேர் அருச்சுனத் தரனை
அரிஅயன் முதலினோர் கண்டு
நாதனைப் பரவிப் புகல்வர்இக் குறியை
நறும் புனல் மலரினால் நாங்கள்
காதலால் போற்றக் கருதிஇங் கடைந்தோம்
கங்கைஒன் றருள்எனக் கருதி
வேதநா யகனும் அவர்க்கருள் சுரந்து
விருப்புடன் இன்னன விளம்பும். 2

அகத்தியன் கடத்துப் புனிதநீர் இங்ஙன்
அடைந்திடப் புரிகுதும் அதனால்
சகத்தினில் நீவிர் பூசனை புரிவீர்
என்னவே சங்கரன் சாற்றி
மகத்துவ முனியான் நதிவர நினைந்தான்
வான்நதி மழைமுழக் கெனவே
இகத்தவர் புகழ எழுந்துடன் ஏக
இவர்கண் டின்பம்எய் தினரால். 3

ஈசனைத் தொழுதெவ ரும்நதி மூழ்கிக்
கடன்முடித் திறைவனுக் கிந்த
வீசுநீர்க் கங்கை மஞ்சனம் ஆட்டி
விரைமலர் தூவியே பழிச்சி
நேசமோ டெளிதாய் வரங்கள்பெற் றிருந்தார்
நிறைபுனல் இதனிடை நிலத்தே
வாசவன் முதலோர் ஓடிட அடையும்
வளங்களும் மகிமையும் வகுப்பாம். 4

மண்பரவும் புடைமரு தூரிலே
மன்னும் உத்தர வாகினி தீர்த்தத்தில்
பண்புடன் படியப் பலன் ஒன்பது
பான்மை உள்ள கிறுச்சனம் நல்கிடும்
எண்ப தோடொரு நான்கு கிறுச்சனம்
இந்திர மோட்சம் படிபவர்க் கெய்திடும்
விண்பரவுந்தைப் பூசந்துலா
விடுமேட நலவிடு மிக்க பலன்களே. 5

தோன்றும் பாதல கங்கை பொருநைநீர்
சுல்வு கின்ற கடனை நதியுடன்
மூன்றும் கூடித் திரிபத கைப்பெயர்
முத்தி நல்கிடும் மடுவினில் மூழ்கு
கீன்றி டும்பலன் என்பான் கிறுச்சனம்
இவைதண்டா யுததீர்த்தம் இதன்கீழுக்
கான்ற மாண்ட வியாசன் தீர்த்தமோ
டைந்தும் ஆட ஐங்குற்றம் அகற்றுமே. 6

மாற்றம் உள்ள மற்றுள தீர்த்தமுன்
வந்து தோய்ந்த வளம்பெற்ற வளம்தரு
நாற்றி சைப்பதி போற்றும்இத் தீர்த்தத்தில்
நாளும் மூழ்க நலம் தரும் உண்மையாய்ப்
போற்று வோர்க்குப் புதல்வ்ரும் செல்வமும்
புந்தியில் சிந்தை செய்பொரு ளும்தரும்
கூற்றம் சீற்றம் கொடுவினை கொண்டநோய்
குற்ற மும்தவிர்த் துக்குணம் நல்குமே. 7

எங்கும்வாழ் தீர்த்த மான சேனைகட் கிறைவி யாகும்
மங்கள தீர்த்தம் என்னும் பொருநையாம் கங்கை மாது
பங்கினன் சிரத்தில் உற்றும் பாகமும் வேண்டி யன்றோ
இங்குயர் வலம தாகம் எய்திடும் இயல்பு தானே. 8

இப்பெரும் தீர்த்தம் தன்னை ஆடினோர் இறைஞ்சி னோர்பின்
இப்பெரும் தீர்த்த மேன்மை உரைத்துளோர் இசைந்து கேட்போர்

இப்பெரும் தீர்த்தம் ஈசற் கியற்றுவோர் இயற்று விப்போர்
இப்பெரும் தீர்த்தம் கொள்வோர் இறைசிவ லோகம் நீங்கார். 9

இச்சிவ தீர்த்தப் பான்மை இசைத்திடில் பரத்துக் கேணி
இச்சிவ தீர்த்தம் காண்பார்க் இறையில னயனும் கங்கை
இச்சிவ தீர்த்தம் யார்க்கும் பவித்திரம் இயற்ற லாலே
இச்சிவ தீர்த்தம் தார கத்தினை இயற்றும் அன்றே. 10

செப்பருந் தீர்த்தம் ஆடிச் சிவபரன் தன்னைப் போற்றி
முப்பெருந் தேவர் வாழும் முத்திமண் டபத்தில் எய்தி
மெய்ப்படு சுத்த பஞ்சாட் சரத்தினை விளம்பப் பெற்றோர்
கைப்படு கனிபோல் முத்தி எய்துவர் கதிசேர் வாரே. 11

எங்கும்வாழ் தீர்த்தம் எல்லாம் தம்இடத் தெய்தி ஆடும்
அங்கவர்க் கருளி அன்றோர் பவங்களைச் கிரிகித் தந்தப்
பொங்கிய தவந்தாந் தீரப் புடைஅருச் சுனத்தில் எய்தி
மங்கள தீர்த்தம் ஆடி வரங்களும் பெற்று மீளும். 12

புண்ணிய இத்தீர்த் தத்தில் புன்மையோர் பொருந்தி னாலும்
பண்ணிய பவங்கள் போக்கிப் பரகதிப் படுத்தி விக்கும்
திண்ணமீ தென்னை என்னில் தெருப்புறக் கழிவு நீரும்
கண்ணக நதியிற் சேரிற் கங்கை நீரான வாபோல் 13

## வேறு

இருக்கில் உரைத்த விதிகருதி இருக்கும் மேலோர் தமக்கீந்து
முருக்குஞ் சாப மதியாட முருக்குஞ் சாப வினைநீங்கும்
பெருக்கு மயனத் தினில் ஆடப் பிறவி நீங்கும் பிழைநீங்கும்
அருக்க உதயத் தினில்ஆட வருக்க முடன்நற் கதிஅடைவார். 14

தீர்த்தம் இதன்பால் செயும்யாகம் தென்பால் உற்ற பிதிர்யாகம்
தீர்த்தம் இதன்பால் சிவபூசை யனப்பூ சைதெ சதானம்
தீர்த்தம் இதன்பால் இருமுகிசேர் கோதா னங்கள திருமேவும்
தீர்த்தம் இதன்பால் செயில்ஒன்றுக் கனந்த பலனாய்ச் சிறந்திடுமே15

ஆண்டொன் றுக்கிந் நதிமூழ்க அசுவ மேத யாகம்ஒரு
தாண்டும் தொண்ணூ றியற்றுபலம் தரும்நித் தியமும் சார்வோர்க்கு
வேண்டும் பலனும் இம்மையிலே விளையும் பலனும் மேதினியில்
ஈண்டும் பலனும் சாயுச்யம் எய்தும் பலனும் இயற்றிடுமே. 16

தென்பால் காசிக் கங்கைதனைக் காணத் தீண்டச் சிந்திக்க
அன்பால் துதிக்க நீராட அவலம் களையும் கவலையறும்

இன்பா சுரியம் மிகஉண்டாம் இனிய சுபசோ பனம்எய்தும்
வன்பால் செய்யும் பவம்நீங்கும் வாணாண் நீங்கும் வினைபோமே 17

கண்ட பொழுது மகிழ்வுற்றாங் கலந்தால் தேகம் புனிதம்உறும்
அண்டர் தொண்ட ருடன்ஆடும் அதனைக் காண ஆகம்எலாம்
கொண்டால் எய்தும் பயிர்என்னக் குழைந்து ரோமக் குச்செறிந்து
பண்டை வினைகள் தமைஒழிந்தார் வருவார் தாம்ப்ர பன்னியையே.18

விண்ணவன் பிரம தோடம் வேதியன் நீச கத்தி
திண்ணிய மறையோன் தேவி செய்திடும் பதிய கத்தி
அண்ணிய திதிஅ கற்றி அலகையோ டரக்கி தீர்ந்த
புண்ணிய இத்தீர்த் தத்தின் புகழ்மையார் புகழற் பாலார். 19

உத்தம இத்தீர்த் தத்தில் உற்றவர்க் கொவ்வோர் காலம்
வித்திய பவங்கள் நீக்கி மெய்க்கதி உதவும் தானம்
இத்தென உரைப்பாம் தென்பால் இபம்தனக் கருளும் தீர்த்தம்
நத்தணி கரத்தோன் தீர்த்தம் நாரணன் கோயில் மேல்பால். 20

அதன்வடக் கான முன்றீ சுரத்தன்ஆ லயத்தின் மேல்பால்
நதியின் முன் றீச தீர்த்தம் நவகன்னி மாதர் தீர்த்தம்
இதன்வடக் கெண்பான் விற்கோல் எய்திய இடத்தில் தானே
மதிமுடி ஈசன் ஈந்த மணிகர்ணி தீர்த்தம் மாதோர். 21

## வேறு

பொதிகை முனிவர்க் கருள்தீர்த்தம் புனித வாம தேவர்க்குக்
கதிநல் கியதோர் பிரயாகைத் தீர்த்தம் கடந்தப் பால்வடபால்
நதியில் ஈரெண் பான்விற்கோல் நாலும் கடந்து நாப்பணுறும்
விதிசேர் திரிவே ளியில் ஐந்து தீர்த்தம் முன்பு விரித்தனமால். 22

இதற்கு வடபால் ஈரைந்து தனுவி னுபமன் னியதீர்த்தம்
இதற்கு வடபால் ஈரைந்தில் ததீசி தீர்த்தம் இந்திராணி
இதற்கு வடபால் இருமூன்று தனுவிற் குலடி போசனமாய்
இதற்கு வடபால் இருங்கமலை கலைமான் இவர்கள் தீர்த்தமதால். 23

இதற்கு வடபால் தனுவொன்றாய் எண்ணில் திருமூ லத்தானம்
இதற்கு மேற்குக் கவுதமராம் இதற்கு மேற்குக் குறுமுனிவன்
இதற்கு வடக்கு நந்திகளாம் இதற்குக் கிழக்கு மகதிமுனி
இதற்குக் கிழக்கு மித்ரமுனி இதற்கு வடக்கெண் கணன்தீர்த்தம். 24

இதற்கு மேற்குச் சிவதீர்த்தம் இதற்கு மேற்குப் பரைதீர்த்தம்
இதற்கு வடக்குப் பிறியமக ரிதற்குக் கிழக்கெண் வசுதீர்த்தம்
இதற்குக் கிழக்கில் அவிர்த்தானன் இதற்கு வடக்கிந்திரமோட்சம்
இதற்கு மேற்கு வசிட்டமுனி இதற்கு மேற்கில் இருக்காமால். 25

இதற்கு வடபால் அரக்கியுரு ஏகல் இதன்கீழ் அலகைவிடல்
இதன்கீழ் இபமா முகன்தீர்த்தம் இதற்கு வடபால் ஏகசுதர்
இதற்கு மேல்பால் ஆதிமனு இதற்கு மேல்பால் அலதந்தன்
இதற்கு வடபாற் புறமதந்தீர்ந் தினிய சைவ தீர்த்தம்அரோ. 26

இதற்கு வடபால் ஈரெண்கோல் எய்தும் அதினில் கருவூரான்
மதிக்குந் தீர்த்தம் அங்ஙன்எழு மாதர் தீர்த்தம் வடமேல்பால்
பதித்த சாலைத் தடம்அங்ஙன் பதுமன் ஓர்கால் பரமனுக்காய்
விதித்த யாகத் தீர்த்தம்அவை சாலா தீர்த்தம் விளங்குமவண். 27

வேதி மிருததீர்த் தம்படிய வேதை மிருத்து முதல்நீங்கும்
சீத நதியின் தீர்த்தமெலாம் திளைத்தார் பேறு செப்புவதோ
பூதி தீர்த்தம் மருதினில்தென் கீழ்பால் பூதி எடுத்தணிய
நீதி தருஞா னப்பேறா நிருமித் தனநித் தியம்பெறுவார். 28

இந்தத் தீர்த்தம் நாற்பதுடன் ஐந்தாம் இதற்குப் பொதுப்பெயர்தான்
எந்தை ஞானம் தருதீர்த்தம் இனிய தார கத்தீர்த்தம்
கந்த மருத வனத்தீர்த்தம் தென்பால் கங்கை நதித்தீர்த்தம்
நந்தி தீர்த்தம் சிவதீர்த்தம் நளின தீர்த்தம் இதன்நாமம். 29

-தீர்த்தவிசேடம் முற்றும்-
ஆகத் திருவிருத்தம் 272

## மூர்த்தி விசேடம்

புடைஅ ருச்சுனம் மேவிய புண்ணிய மடுவில்
கடனை தண்பொரு னாநதி கங்கைஇம் மூன்றும்
உடன்நி றைந்ததீர்த் தத்திரு மகிமையை உரைத்தாம்
விடைய வன்திகழ் மூர்த்திவி சேடத்தை விரிப்பாம். 1

பொதிகை யிற்படர் பொருநைசூழ் புவிகளிற் புனித
நதிஅ ணிந்தவர் தானத்தில் அறுபத்து நான்கு
முதிய என்பதாம் அதனில்மூ எட்டில்முன் தோன்றும்
அதிகம் இத்தலத் தமர்குறி என்பர்கள் அறிஞோர். 2

அந்த நாள்அயன் அரிஅரன் ஆதி அநாதி
விந்து நாதமே சிவம்சத்தி விதிவழி ஒடுங்கும்
முந்து தத்துவங் களில்அவை கடந்திடும் முடிவில்
தொந்த மேசெயும் ஒருவன்இச் சுடர்க்குறி யாமால். 3

ஈறி லாதவன் எங்குமாய் நின்றவன் என்றும்
மாறி லாதமெய் அன்பர்கள் மனத்துளான் மருதின்
பேற தாயினோன் பேருல கீன்றருள் பேதை
கூற தாயினோன் குடிலையாய் நிறைந்ததிக் குறியே. 4

கோதி லாதஎண் குணத்தவன் கொண்டிடும் கோலம்
பூத லம்புனல் பொங்கழல் வாயுவான் பொலிந்த

ஆத வன்மதி இயமானன் அட்டமூர்த் தமதா
ஓத நின்றிடும் ஒருவன்இம் மருதினில் உறைவோன். 5

பேசு கின்றநான் மறைக்கும்எட் டாத்தவ பிலத்தால்
பேசி யேஅழைக் கின்றமா தவருடன் பெட்பாய்ப்
பேசு கின்றவர் மனுவொடும் பேசிய குணத்தால்
பேசு கின்றநா யகர்எனப் பெயர்படைத் தனரே. 6

இரங்கும் ஓர்சொலை வாகனம் ஆகவும் இனிதாய்
வரந்த ரும்பரை யாகவும் வைத்தவர் முடிமேல்
தரங்க நீர்எனும் தாமரைத் தொடையலாள் தனது
புரஞ்சு லாவுறும் வளத்தினர் பூதிவித் தகரே. 7

### வேறு

தலமதில் மேன்மை பெற்ற தண்மரு துறைவோர் தம்மைக்
குலவரை என்ன ஓங்கு கோபுர தாப ரத்தை
நலமுடன் கண்டோ ரேனும் சாய்ந்தநா யகரைப் போற்று
மலபரி பாகம் உற்ற மாதவர் ஆவர் அன்றே. 8

புலனுடன் பொறிக லங்கும் போதுயிர்க் கபயம் நல்கி
வலதுசோத் திரத்தில் தார கத்தினை வழங்கி முத்தி
நிலமதில் அருளும் இந்த நின்மல மூர்த்தி மூஎட்
டிலகிய மூர்த்திக் காதி எப்படி போலும் என்னில், 9

கலைகளில் வேதம் போலும் கவிகையில் கனமே போலும்
சிலைதனில் மேருப் போலும் திருவிற்றே நிதியம் போலும்
அலைபுனல் அதனில் கங்கை ஆவினில் காம தேனு
நலமலி புண்ணி யத்தின் நாயகன் பூசை போலும், 10

புவியினில் மருதம் போலும் பூவினில் நாறும் பூவே
தவமதில் உயிர்கட் கன்பு சார்ந்திடும் தன்மை போலும்
கவைகொள்பா தவத்தில் தாரு உறுப்பினில் கண்கள் போலும்
நவைஇலா இன்பம் தன்னில் பேரின்ப நன்மை போலும், 11

தானத்தில் அதிகம் அன்ன தானமாம் தரணி யோரில்
வானத்த ரவரில் மிக்கோர் வானநா யகரே வான
மீனத்தில் சோமன் போலும் வேள்வியில் துரகம் போலும்
மோனத்தால் அரனைக் காண்பார்க் கிக்குறி முதலாம் அன்றோ. 12

ஆதியும் நடுவும் ஈறும் அல்லதோர் அதீதம் ஆகும்
பேதமும் பிணிப்பும் ஆகும் அல்லவாம் பிரமம் ஆகும்
போதமும் கடந்த நாத பூரண புனிதம் ஆகும்
ஓதிடும் அளவுக் கெட்டா ஒருவன்இம் மருது ளானே. 13

### வேறு

காண்பானும் காட்சியுமாய்க் கள்ளமனம் இல்லார்க்குப்
பூண்பானும் பூணுமாய்ப் புண்ணியமும் புகழுமாய்
ஆண்பாலாய்ப் பெண்பாலாய் அவைகடந்த அப்பாலாய்
மாண்பான மருதீசன் தனக்குவமை வகுக்குங்கால், 14

### வேறு

மேருவுக் குவமை அந்த மேருவே வேலை சூழ்ந்த
பாரினுக் குவமை பாரே பள்ளநீர்க் குவமை மற்றே
காரினுக் குவமை காரே கருதின்சிந் தாம ணிக்குச்
சீர்பெறு நிதியம் என்பா ரானபோல் சிறப்பு வாய்ந்த, 15

திருப்புடை மருதில் வாழும் செல்வனுக் குவமை அந்த
விருப்புடை யோர்கட் குண்மை விமலனே ஆகும் வெற்பார்
அருப்புடைத் தனத்தி யோடும் அருள்வழி நடத்தும் செய்கை
உரைத்திடில் உதவு நட்புக் கொற்றுமை போலும் அன்றே. 16

எள்ளிடை எண்ணெய் போலும் இரவியும் சுடரும் போலும்
வள்ளலும் புகழும் போலும் மலரும்வா சனையும் போலும்
ஒள்ளழல் வெதுப்பும் போலும் உதகமும் குளிரும்போலும்
பள்ளநீர் உருவம் போலும் பாகுறும் இரதம்போலும். 17

மருவிஇங் குறைந்து வாழும் அவர்களைப் பணியப் பெற்றோர்
விரவிய பாவம் எல்லாம் வெவ்வழல் பட்ட பஞ்சாம்
பரிதிஎன் றூழைக் கண்ட பனிஅதாம் பரந்து சூழும்
உருமனைக் கண்ட பாம்பாம் உலவையைக் கண்ட தூளாம். 18

அரிகண்ட வேழம் போலும் அஞ்சுறா அதனைக் கண்ட
வரிகொண்ட சிறுமீன் போலும் மாதவர் தம்மைக் கண்ட
பெரியதீ வினைகள் போலும் பிழம்புறும் சுடரைக் கண்ட
இருளது போலும் பாரில் இட்டுணார் செல்வம் போலும், 19

அன்பிலா தவரைக் கண்ட ஆதுலர் போலும் இல்லோர்க்
கின்பம்எய் திடவே நின்ற துன்பம்அ திரியல் போலும்
வன்பிணி மருந்தைக் கொண்ட வாறெனும் மழையைக் கண்ட
கொன்பயில் கோடை போலும் குலைகுலைந் தோடும் மாதோ. 20

விதிப ராவு புடார்ச்சுன நாயகன் மேலோர்
இதயம் மேவும் இலேபன சுந்தர இறையை
உதய காலத்தில் உமையுடன் இறைஞ்சிட உலகில்
புதல்வர் பேறுடன் பொருள்களும் மகிமையும் பெறுவார். 21

சீல மாகவே கடும்பகல் போற்றச்செங் கோலால்
தாலம் மூன்றையும் புரந்திடும் தகைமைசேர் மாலை
மூல லிங்கம்ஓர் ஆயிரம் மூர்த்தியை உன்னிச்
சால வும்தொழும் பலன்தரும் யாமத்தில் சார்ந்தே. 22

துதிசெய் வோர்கள் நாற்பயன் பெறுவார் சுருதியினால்
நிதமும் போற்றுவோர் தேவரே நிருமலன் பணியைக்
கதியை வேண்டியே செய்பவர் கணங்களே வழுவா
விதியை உற்றவர் விமலராய் வீற்றிருப் பாரே. 23

பக்கம் தன்னில்பன் மூன்றினும் பருவத்தும் பணிய
மிக்க செல்வமும் கல்வியும் ஞானமும் விளையும்
செக்கர் அஞ்சடை நாயகன் நிசிதனில் செய்ய
நக்க பங்கயம் போற்றுவோர் நாதர்ஆ குவரே. 24

சாய்ந்த நாயகன் சந்நிதா னத்தினில் தீபம்
பாய்ந்த லோகத்தால் பாத்திரம் பட்டுடை வருக்கம்
காந்தி சேர்நவ மணிப்பணி கற்பணி கவிகை
வாய்ந்த வாசனைத் தீம்புகை ஆடல்வாத் தியங்கள், 25

மாலை சந்தனம் மஞ்சனம் ஆட்டநெல் மதுத்தேம்
பாலோ டன்னநல் வருக்கம்வேள் விகள்பல .... னில்
ஏலு மாறுப கரிப்பவர் அணுஒன்றுக் கெண் ....
சீலம் ஆகிய கற்பங்கள் சிவபதம் சேர்வார். 26

தென்பால் காசிநாதர் சிவக்கொழுந் தீசுரர் தென்கயிலை
பொன்பாய் புடைமா மருதீசர் பூதி வரதர் நாறும்பூ
இன்பர் சாய்ந்த இலிங்கரி லேபன சுந்தரர் பெ..
என்பர்க் கருளும் முத்தீசர் அரியதார கேசுரரே. 27

## வேறு

வேத நாதர் புனிதேசர் மித்தி ரேசர் விதியுடனே
சீத ரேசர் மனுநாதர் சித்த நாதர் அகத்தீசர்
கோத மேசர் மூலேசர் குடிலே சுரராம் பிறவ .....
போத வாணர் சம்புவனர் புகளை யைந்தாய்ப் .... 28

தீர்த்தம் ஆடி நீராடிச் செய்ய அக்கு வடம் புனைந்து
மூர்த்தி வாழும் புடைமருதில் முத்தி மாமண்டபம்எய்தி
சேர்த்த பஞ்சாட் சரம்இயன்ற சத்தி செபத்துச் சரிப்போர்தம்
கீர்த்தி பேசுவோர் மகிமை எம்மால் கிளக்க முடியாதே. 29

-மூர்த்தி விசேடம் முற்றும்-
ஆகத் திருவிருத்தம் 301

## 1. நடம்புரி படலம்

சூதயோகியரை எய்தி துடக்கறு முனிவர்....ல
பாதங்கள் பரவி மேற்சொல் தொகையினில் படன மேசெய்
தாதரம் பெருக விண்ணோர்க் கருளிய வகையை யெங்கட்
கோதுதல் வேண்டும் என்ன முகமலர்ந் துரைக்க லுற்றார். 1

ஆதியில் கயிலா சத்தில் அன்றுதைப் பூசந் தன்னில்
வேதனும் மாலும் வேள்வி நாதனும் விண்ணு ளோரும்
நாதனை எய்திப் போற்ற நலமிகு நடனம் அன்னோர்க்
காதரம் பெருகக் காட்ட அடியிணை பழிச்சு கின்றார் 2

புண்ணிய முதலே போற்றி பூதநா யகனே போற்றி
விண்ணவர்க் கிரங்கி நஞ்சம் உண்டருள் விகிர்தா போற்றி
அண்ணலே போற்றி எங்கள் அற்புத நாதா போற்றி
தண்ணளி யான ஞானத் தற்பரா போற்றி போற்றி 3

முற்றுணர்ந் தவனே போற்றி முடிவில்இன் புடையாய் போற்றி
உற்றதன் வயத்தாய் போற்றி உணர்வியற் கையனே போற்றி
மற்றியற் பாசம் நீங்கி வரம்பிலா ஆற்ற லான
பற்றுதூ யுடம்பாய் போற்றி பரம்பொருள் உடையாய் என்ன, 4

அளவிலாத் துதிகள் செய்தார் அவர்கள்பால் அன்பு கூர்ந்து
வளமிகு செயலால் வேண்டும் வரம்பெறு வீர்கள் என்ன
நளிர்புனல் தரித்தோன் கூற நற்பதம் பணிந்து மாயோன்
முளரியோன் முதலோர் கேட்போர் முத்திநா யகனே இந்த, 5

நடத்தின்நற் செயலும் தீர்த்த நன்மையும் திருநாள் வாழ்வும்
துடக்கறுத் தவர்கள் செய்யும் துதிகளும் பொருந்தும் இந்த
இடத்தினில் பணிந்தி ருக்க எங்களுக் கருள்வாய் என்னப்
படத்தர வசைத்த நாதன் நந்தியைப் பார்த்துக் கூறும் ; .6

தலத்துயர் முத்தி நல்கும் தானமாய்த் தார கத்தின்
குலத்துயர் பதியாய் வேதக் குடுமியாய்க் குடிலை யான
நலத்ததென் மருதில் நாமே நடனம்கொண் டருள் வதாலே
பலத்துயர் பரமர் நித்ய சபைஎனப் பகர லாமே. 7

தரைக்கணில் அதிகத் தெய்வத் தானங்கள் அனந்தம் தன்னில்
உரைத்திடத் தரணி லிங்கம் உற்பவம் முத்தி நல்கும்
பிருத்துவி ஆரூர் ஆகும் பேசிடில் அப்பு லிங்கம்
திரைப்புனல் பொன்னி சூழ்ந்த தென்திரு ஆனைக் காவே. 8

வதிபவர்க் கெய்தும் முத்தி வன்னியாம் சோதி லிங்கம்
நிதிபெற நினைக்க முத்தி நீடுகா ளத்தி வாயுப்
பதிஅதன் பெருமை கேட்கப் பரகதி நடனம் ஓங்கும்
கதிதரு வான லிங்கம் கருதியே தரிசிப் போர்க்கே. 9

இறக்கமுத் தியதாம் காசி எழில்புடை மருதக் காசி
சிறக்கும்இ ரத்னம் ஓங்கித் திகழ்சபை திருஆ லங்கா
நிறக்கன கத்தால் மேவும் நெடுஞ்சபை தில்லை யாகும்
துறக்கநா டென்னும் கூடல் இரசத சபையாய்த் தோன்றும். 10

பொருநைசூழ் தீர்த்தம் தன்னில் பூந்துறை நெல்லை மீதில்
தருவளர் பணைசேர் கின்ற தாம்பிர சபைய தாகும்
திருவளர் திருக்குற் றாலம் சித்திர சபைய தாகும்
மருதமா பதிதான் நித்ய சபைஎன வழங்கும் மாதோ. 11

உதித்திடக் கருதக் கேட்க உண்மையாய்க் காணப் போற்ற
வதித்திட இறக்க முத்தி வழங்கிடு மகத்வம் நல்கும்
கதிக்கிட மான தென்பால் காசிக்கா சினிபோல் மூன்றாய்
விதித்திடும் உலகில் இல்லை தெரிசிக்க வேண்டு வோர்க்கே. 12

பூமியில் முத்தித் தானம் புடைமரு தென்னும் காசி
நேமிதென் கயிலை யாகும் நீங்கிடா ததனில் நித்தம்
வாமமே கலையாள் காண மகரபூ சம்போல் என்றும்
சேமநல் நடனம் செய்து திருவிழாக் கொள்வோம் அங்ஙன் 13

துத்தியம் உதவு மின்னோர் தங்கட்குச் சுதின நித்த
முத்திசேர் கின்ற சீவன் முத்திஅம் பலம தான
நித்திய சபையில் ஈவோம் அவன்வர நிகழ்த்து கென்றான்
இத்திற வசனம் நந்தி இவர்கள்பால் இசைக்க லுற்றான். 14

கேட்டுள்ளம் மகிழ்ச்சி எய்தி கிளர்நந்தித் தேவைப் போற்ற
சேட்டவர் பரவுந் தெய்வத் திருக்கயிலாயத் தண்ணல்
பாட்டளி முரலும் கஞ்சப் பாதங்கள் பரவி ஏத்தி
நாட்டம்பெற் றிடும்பே றெய்தும் இத்தலம் நண்ணி னாரே. 15

பூசம்சேர் மகர மாதம் பொங்கிய புடைசேர் கின்ற
வாசமா மருதில் ஈசன் மகிழ்விழாக் கண்டு மன்னி
நேசமோ டுவந்து போற்றி நித்திய பரமா னந்த
ஈசநா ரும்பூ நாத என்றுபன் முறையால் ஏத்தி, 16

பூசித்து மலரால் போற்றிப் புனிதமா தவங்கள் செய்தார்
காசிக்கோன் விடைமேல் தோன்றிக் காட்சிதந் தவரை நோக்கி
மாசற்றீர் வம்மின் வம்மின் மன்னிய நடனம் காண்பீர்
தேசற்ற வளிவி லாத இத்தலம் சேரப் பெற்றீர். 17

தன்னில்ஆ னந்த மான தாண்டவம் புரிவோர் நீவிர்
துன்னியே பணிவீர் என்று சுதினநல் வரங்கள் நல்கி
அன்னடம் புரிந்தான் எங்கோன் அம்பலம் அதனில் போற்றி
மன்னினார் மாயோன் ஆதி மாதவர் மகிழ்ந்து போற்றா, 18

கண்ணகன் ஞாலமும் கற்ப கந்திகழ்
விண்ணுடன் யாவரும் விரும்பு லோகமும்
புண்ணியர் எண்ணிலார் பொருந்து பூமியும்
மண்ணில்வாழ் மருதம்என் றறைந்திட் டார்அரோ. 19

ஆதவன் கண்டதா மரையின் அன்னதாம்
போதக முகமலர்ந் தின்ன போற்றுவார்
நாதனே நித்திய சபையில் நாடக
பாதனே பரைஉமை பாக போற்றியால் 20

இப்படி யேபுகழ்ந் தேத்தும் மேலவர்
மெய்ப்படு புகழுமாய் விருப்ப மோடெழீஇ
மைப்படி கண்டனை வணங்கி வாழ்த்தியே
ஒப்பிலா தளவளாய் உவந்தி ருந்தனர். 21

நடம்புரி படலம் முற்றும்
ஆகத்திரு விருத்தம் 322

## 2. விருத்திர வதைப் படலம்

விடையவன் கடவு ளோர்கள் விரும்பிட நடன சேவை
புடைஅருச் சுனத்தில் ஈந்த புகழ்இது புனித நாதன்
அடல்செயும் அசுரை வென்ற பழிதனை அகல வேண்டி
இடமதில் மருதோ டொன்றித் தவம்செயும் இயல்பு சொல்வாம். 1

மாதவர் யாரும் போற்றி மலரடி வணங்கிக் கேட்பச்
சூதமா முனிவன் சொல்வான் தும்பையோ டறுகு வேய்ந்த
பூதநா யகன்வ ரத்தால் புவனமும் யாவும் ஈன்ற
காதலா கமலப் புத்தேள் காசிப முனியைத் தந்தான். 2

காசிபப் பிரமற் கான கற்புடை அதிதி என்னும்
பேசிய திதிமி னென்னும் பெண்கள்ஓர் இருவர் தம்மில்
ஆசில்சீர் அதிதி பெற்றாள் அமரரை; அசுரர் தம்மை
நேசமோ டுவந்து பெற்றாள் திதியவள் நிகழும் நாளில், 3

அந்தரர் அசுரர் தாயா தியர்களாய் அகங்கா ரம்கொண்
டுந்தவே ஒன்றுக் கொன்று வீறுடன் ஒன்ன லாராய்
வந்திகல் புரிந்த காலை அசுரரை மாய்த்தோர் விண்ணோர்
இந்தவா றசுரை ஈன்ற திதிஅறிந் திரங்கி நின்று, 4

உளந்தடு மாறி என்செய் குதும்என உன்னி ஆசான்
விளங்கிய பதம் பணிந்து வேண்டுகோள் விளம்பி ஐய
வளங்கொள்எம் மக்கள் ஆன அசுரரை மாய்த்தார் விண்ணோர்
அளந்தறி காலம் பார்த்தே எனஅழு தழுங்கி னாளே. 5

நின்னருள் வரத்தால் தந்த நிருதரை நிருமித் தென்றன்
இன்னல்தீர்த் தாள்வாய் என்றே இறைஞ்சுவாட் கிரங்கி வெள்ளி
மன்னவன் புகல்வான் உன்றன் மனத்துயர் தீரும் வண்ணம்
நன்னல மாகச் செய்தும் நடுக்குறேல் நங்கை என்றான். 6

திதியுறு வருத்தம் தீரச் செப்புவான் திங்கட் செல்வன்
அதிதிகா சிபன்இ யற்று ம்அருமகத் துறுவோம் நீயும்
கதியுடன் வருதி மாறு காட்டிய சமிதை நெய்யால்
விதியுடன் இயற்றில் அந்த வேள்வியின் விருத்தியாக, 7

அசுரனும் மைந்த னாக அவதரித் திடுவான் அன்னோன்
விசுவமாய்ச் சுரரை வெல்வான் என்றவட் குணர்த்தி வெள்ளி
வசுவினுக் குதவும் யோக வானிட முற்றித் தன்மைக்
கசிவுடன் உரைக்க மாதும் காசிபற் றொழுது நின்றாள். 8

சுக்கிரன் வேள்வி நண்ணிச் சொற்பெறு முனிவ னோடு
அக்கினிக் குதவும் போழ்தில் அருள்எனத் திதியும் கூற
மிக்கவள் உரைமேல் உள்ளம் மேவிடச் சுரபே தத்தால்
அக்கணம் பழுவென் றோரா தாகுதி மனுவால் ஆற்றி, 9

## வேறு

நோக்கினன்அவ் வன்னிதனை நோக்கஒரு பானு
ஆக்கினை யினால்அழிவில் வந்தவத ரிப்பான்
பாக்கியம் இவர்க்குவரு பாலகன் எனத்தான்
தாக்கியகொல் கொண்டசுரர் தாம்மகிழ் வுறத்தான். 10

செந்தழல் அழன்றசிறு குஞ்சியொடு சீறு
மந்தழ குன்றிநிகர் அம்பகமும் வீர
தந்தமுறு மந்தநகை கொண்டுதரு வாழும்
இந்திரனோ டந்தரரும் ஏகிட உதித்தான். 11

வந்ததொரு பாலகனை மாதவன் வழங்கச்
சிந்தைகொடு வாங்கிஅவர் சேவடி பணிந்தே
உய்ந்தனன் எனத்திதியும் ஓகையுடன் எய்தி
எந்தைபுகர் முன்பணிவித் தேதிதி இசைப்பாள். 12

மிக்கமக வுக்குறுதி செப்பென விரும்பிச்
சுக்கிரனும் அன்பொடு சுதற்குவகை யாலே
இக்கனலில் எய்துதலின் எக்கியவி யோனி
தக்கதென வேபெயர் தரித்தனன் அதன்பின் 13

ஆசிபல நல்கினன் அரும்புதல்வ னுக்கு
காசிபன் மிகுந்தகரு ணைத்திருவு ளத்தால்
வீசுபுகழ் எய்துவரம் மேன்மைகள் அளிப்பான்
ஆசொழிக என்றசுர மைச்சனருள் செய்தான். 14

மைந்தனுறு வாலுழைய சிங்கம்என வேவந்
தந்தமிகு வீரமுடன் அன்னையை வணங்கி
விந்தைஅசு ராதிகளின் மேன்மைபெறு வண்ணந்
தந்தருள் எனக்கழறி யேசரணம் உற்றான். 15

உற்றதொரு பாலனை உவந்தனை மகிழ்ந்தே
எற்றுகடல் சூழ்புவி எவைக்குமர செய்தி
பற்றலர் இகந்துபரி வெய்துவை பராவி
அற்றமுனி காசிபர் அருள்பெறுதி என்றாள். 16

புத்திரனும் அன்னைவச னம்தலை புனைந்தே
அத்தருள் காசிபரை எய்திஅடி போற்றி
இத்தரணி யேமுதல யாவும்அர செய்த
வித்தகம தாகஅருள் செய்என விளம்ப, 17

மைந்தனை வியந்துமுனி வாஎன அழைத்தே
புந்தியுரை செய்துவளர் பொன்மயவ னத்தெம்
தந்தையை மனத்தில்உனி யேதவம் முயன்றால்
விந்தைமலர் அம்புயன் மிகுந்தவரம் நல்கும், 18

அன்னவரம் எய்திஅசு ராக்குமுத லான
மன்னவனும் ஆகிவளம் எய்துவை வரத்தால்
முன்னியன யாவும்முடி யப்பெறுவை என்னச்
சொன்னமுனி யைப்பரவி யேசுதனும் வந்தான். 19

## வேறு

முன்னிய யாவும் எய்த ஆசிகள் மொழிந்த வாறே
மன்னிய முனிவர் போற்றி மனுஉப தேசம் பெற்றுப்
பொன்மய வனத்தில் போந்தே தவத்தினைப் புரிவான் போவான்
சொன்னஅவ் வனத்தில் சேர்ந்தான் எக்கிய யோனித் தோன்றல். 20

சாற்று கின்றமெய்த் தவத்தினைக் கருதியே சார்ந்தான்
சீற்றம் மிக்கதோர் அரிகரிப் பகைத்திறம் ஒழியா
மாற்றம் இல்வரைச் சாரலில் குற்றிபோல் வதிந்தே
ஏற்ற நற்றவம் செய்தனன் கண்டவர் இரங்க. 21

விஞ்சை கொண்டெழு நாவெரி விதியினால் சொலித்த
அஞ்சு தீயின்மேல் ஆறையும் அவித்தவன் அருளால்
உஞ்சல் ஆடிய சிக்கமே வறிதிகொண் டேறிக்
கஞ்ச நாள்மலர்க் கடவுளைக் கருதியே நோற்றான். 22

யோகம் மேவியே விழியினை அந்தரத் துய்த்து
வேகம் ஆகிய காலினை அடக்கிமெய் அங்ஙன்
சோகம் அற்றனன் உணர்வன்றிச் செயலன்றிச் சுரர்கள்
வேகம் அற்றிட இப்படி நோற்றனன் வெகுநாள். 23

அரிய நற்றவம் ஆண்டுநூற் றிருபதின் அளவும்
புரிய எக்கிய யோனிதன் தவாக்கினி பொங்கி
விரியும் வையகம் விண்சுவர்க் கத்தினும் மேவி
எரிய தென்னவே வெம்மையை இயற்றிட இதுதான், 24

யாதெ னச்சுவர்க் கத்தினர் முதலியர் யாரு
ஏத வெம்மை வாட் டிடும்இவை எக்கிய யோனி
பூத லத்தினில் புரியும்த வாக்கினி போந்து
வேதை செய்வதென் றுணர்ந்தவர் ஆற்றலர் வெருண்டு, 25

சத்திய லோகம் சார்ந்து தாமரை வாணன் தன்னை
துத்தியம் செய்து பாதம் பரவியே தொழுது நின்றார்
அத்தனே அசுரன் செய்யும் தவாக்கினி யான வெம்மை
எய்த்திடத் தாகச் சோகம் இயற்றிட யாங்க ளெல்லாம் 26

அஞ்சியே உனைஅ டைந்தேம் அடைக்கலம் என்று தாழ்ந்தார்
கஞ்சநாண் முகத்து வேதா கடவுளர் தமக்கி ரங்கி
அஞ்சல்என் றபயம் தந்தே அனத்தினை உகைத்த கன்றே
மிஞ்சவே தவம்செய் எக்ய யோனிபால் மேவி னானே. 27

மேவிய வேதன் முன்பு தவத்தினான் விழித்தெழுந்து
பூவலர்ப் பாதம் போற்றிப் புண்ணிய முதலே பூவில்
நாவினாள் பாகா போதா நான்முகத் தொருவ வானோர்
தேவனே போற்றி என்று தோத்திரம் செய்து நின்றான் 28

நின்றவன் தன்னை வேதா நோக்கிநீ தவம்செய் நீர்மை
நன்றென நின்க ருத்தே தெனவினாய் நவிற்று கென்னத்
துன்றுமற் றவன்ப ணிந்து சொற்றுவான் சுலவு பாரில்
பொன்திகழ் உலகில் சொர்க்க புவனத்தில் உள்ளோர் தம்மால், 29

சூலம்மழு வாட்படை தோமரம் முசலம்
வேலம்பி தனால்எனை வென்றிடா வரமும்
ஞாலம்முத லாயின புவனமும் யானே
கோலின்வழி யாளவும் தந்தருள் கூர்வாய் 30

என்ன துள்ளத்தில் எண்ணிய யாவையும் எய்த
மன்னு மேனிகாத் திரமதாய் நாள்தொறும் வளர
அன்னை அத்தன்நீ யாவையும் படைத்திடு மலரில்
துன்னு நான்முகத் தொருவனே இத்துணை வரமும், 31

தந்த ளிக்கெனப் போதனும் தயவினால் தந்தே
மைந்த என்றனன் எக்கிய யோனிஇவ் வரங்கள்
இந்த வண்ணமே பெற்றனன் துதித்தனன் எழில்சேர்
சந்த வேதனும் சத்திய லோகத்தைச் சார்ந்தான். 32

ஏட விழ்ந்தமா மலரவன் ஈந்திடும் வரத்தால்
நாடொ றுமிவங்க மிக்கென வளாந லத்தால்
சேடர் யாவரும் ஓங்குமெய் விருத்தியால் சிந்தை
நீடி யேவிருத் தாசுரன் என்னவே நிகழ்த்தி. 33

பெயர்வி தித்தனர் விதிதர மேற்பெறும் வரத்தால்
புயல்நி றத்தவன் எனப்புவி அந்தரம் பொருந்தும்
வயமு டைத்துயர் தேகத்தன் மன்னுமூ வுலகும்
சயம்ப ரத்தினி ஆண்டனன் பூண்டிடும் தருக்கால். 34

அழுந்து நேசமொ டசுரரை உயர்த்திட அமைந்தே
எழுந்து வானுளோர் தங்களைப் பொருவதற் கெண்ணி
தொளுந்தன் தானைகள் சூழ்வரப் போந்துவெங் கதந்தான்
கொளுந்த வேவிருத் தாசுரன் சுரர்கள்மேல் கொதித்து, 35

போந்து வான்வழி பொருந்திட விண்பதி புகுவான்
பாய்ந்து சென்றிடும் பரிகரி தேர்படைக் கலங்கள்
வேய்ந்த மள்ளர்கள் வெள்ளமும் பள்ளிநீர் விரியச்
சாய்ந்து சூழ்வரத் தருக்குடன் சூறைபோல் சார்வான். 36

## வேறு

அதிர்ந்து வரும் ஆக்கிரம வீரன்அவன் முன்னே
எதிர்ந்தசரம் மற்றசரம் யாவும்இரி வெய்தி
ஒதுங்குற உயிர்ப்பில்வரு சூறைஉல வைக்கே
அதுங்கவிழி மாவடவை யாம்எனவும் மேவா. 37

அண்டமுக டுந்தமுடி அடிகொடகி லந்தான்
விண்டிட நடந்தசுரன் மேவிட விரைந்தே
கண்டவர்கள் ஓடவளர் கைகள்திசை மேவக்
கொண்டல்உரு முக்குரல் கொதித்தமுளை வாயால், 38

விண்ணவர்கள் மன்னபொர வாஎன விளித்தான்
துண்ணென எழுந்தமரர் சூழ்படை திருத்தி
அண்ணல்அயி ராபதனம் அமர்க்களம்அ துற்றே
எண்ணமொடு போர்வினை இயற்றிட எதிர்ந்தான். 39

## வேறு

தேவ வீரர் ஆர்த்தெழுந்து சிலைகள் கோடி மெய்திரிந்து
ஆவ மீதினில் தெரித்த னேகவாளி அவுணர்மேல்
ஏவி டக்க னன்றோனார் எதிர்த்துவாளி மாறியே
தூவி டச்சி வந்த மாகர் தோல்கைவாள் சுழற்றினார் 40

தான வீரர் ஆயிரம் தருக்கு வாளி ஏவிட
வான வீரர் ஆயிரம் மறுத்து வாளி தூவினார்

சோனை என்ன எய்தவாளி சொல்லுகின்ற இருவகைச்
சேனை வீர ரும்கலந்து செருவி ளைத்து நின்றனர். 41

## வேறு

கோலம்பு முள்வா யம்பு கோடம்பு பிறவா யம்பு
வேலம்பு விடவா யம்பு மிகுகனல் வடவா யம்பு
சூலம்பு சுழல்வா யம்பு சுரிகைவாய் அம்புள் ளிட்ட
மாலம்பி னாலும் மாறி மாறிவந் தடுபோர் செய்வார். 42

தேரு கைத்த வயவ ரோடு தேரு கைத்த வயவரே
கோர முற்ற பரிய ரோடு கோர முற்ற பரியரே
வாரணத்த ப்ாக ரோடு வார ணத்த பாகரே
போரில் உற்ற வீர ரோடு போர்வலத்தர் பொருவராய், 43

மல்லரோ டெதிர்த்த மள்ளர் வாள ரோடு வாளரே
வில்லரோ டெதிர்த்த வில்லர் வேல ரோடு வேலரே
சொல்லரோ டெதிர்த்த சொல்லர் சூல ரோடு சூலரே
வெல்லு மள்ளர் ஆர்ப்பெ ழுந்து மிகுசமர்ப் பொருதரோ 44

வானம் ஒத்த யானை யில்பெய் வாளியேஉடுக்கணம்
மீனமற்றி லாழி தைத்து விடுதல் மேக நுழைசுட
ரான தப்பு றத்தெழும் பலகவு சொரி யந்தி பான
றானை யிற்செ றுத்த வின்ன சமர்செய் கின்ற தளமரோ 45

கொள்ளி கொட்பு றுத்தசாரி கோலெ னச்செல் வேகமா
வெள்ளம் உற்ற கடலும் வானும் விரிய முற்று தூள்எழ
பள்ளநல் தரங்கம் ஒத்த பாயுமா அனேகமா
வள்ளி லைக்கை வேலயத்த வாசிவெள் ளச்சுமால் 46

வாழி யெட்டு மலையி னோடு மற்று முள்ள வரையதோ
ஏழி சைத்த அரியினோடு எழுந்த பானு இரதமே
ஆழியிற்செ றித்தபா றடுக்கும் ஆர்க லித்திரள்
பாழி மொய்த்த பாகர் உய்த்த பாண்டில் வைய மீண்டதே. 47

கந்து கச்சி ரிப்பின் ஓசை கவிழ்ம தக்களிற்றின்ஓசை
தந்திரத் தேரின் ஓசை சங்கின் ஓசை எங்கணும்
வந்து ரத்த வயவர் ஓசை வாள்படைக் கலத்தொலி
அந்தரத்தர் நாடு முட்டி அப்புறத்தெ ழுந்ததே 48

சாரி சுற்றி மாரி எற்றி நேர்ள திர்த்த தானவர்
வீரி யத்தர் வீற டக்கி வெற்றி பெற்ற வென்றதம்
தாரி சைத்த தோள்பு டைத்த தறுகண் வீரர் மறுகவே
வாரி எற்றி வாரி எற்றிவல்ல போர்ம லைந்தனர். 49

இத்திறத்த போர்வி ளைத்தி றந்து ளோர்கள் எண்ணிலார்
தைத்த வாளி யோடி ழிந்து சாய்ந்து ளோரும் எண்ணிலார்
மைத்த குஞ்சி தாரி னோடு மாண்டபேர் அனேகரால்
மெய்த்த மார்பில் நேமிதைக்க வீய்ந்தவெங் களத்தரே. 50

கால்சி தைந்த நீர ருங்கோல் கரிசிதைந்த பாகரும்
மேல்சி தைந்த போர ருஞ்சொல் வெகுளிசிந்து வீரரும்
தோல்சி தைந்த தோள ருங்கை வாள்சி தைந்த சூரரும்
பால்சி தைந்த தார ருஞ்செய் பைங்க ளத்தி றந்தனர். 51

மொழிசி தைந்த பாக ரோடு மூரி வையமற்றன
சுழிசி றந்த துரக மோடு சூரர்வேகம் அற்றன
அழியும் வெம்ப டைக்க லத்தோ டாண்மை யற்ற வங்ஙனம்
விழியி னோட றுங்க பந்தம் வெங்களத்தில் ஓடவே. 52

செந்நி லத்திறந்து ளோர்கள் சோரி யாறு செல்லவே
பன்னி ணத்த குவியல் மீது பாரி டங்கள் கூளிகள்
கன்னி யைத்து தித்திறைஞ்சி உண்ணவே களிப்புடன்
துன்னி ஆடல் பாடல் செய்து தொகுபிணம் சுவைக்குமால். 53

காக மோடு பாறும் வேறு கழுகினங்கள் கவ்வியே
வேகமற்ற பிணம லைத்து மேதை சுற்று மூளைவாய்
யாக முற்ற வேசு ழற்ற அதனொடுங்கு றைத்தலை
மாக முற்றி வீழ்வ தற்ற வாரியொத்த களரிவாய். 54

மயங்குவீரர் மயல்தெளிந்து வல்ல போரில் முற்றியே
பயங்கொளார் மலைந்திடார் பணைத்ததோள் புடைத்துடன்
வயங்கொள் வெஞ்சி னத்தராகி மதியினைப் பிளந்தெனத்
தயங்கும் வக்ர தந்தவாய் மடித்துமென்று சாடுவார். 55

தகுவ வீரர் தேவ வீரர் சாரி மாறி வேல்பிடித்து
எஃகம் உற்ற வெழுவெ டுத்த இருதிறத் தலைவரும்
வெகுவி தந்த போர்வி ளைத்து வீரர்சாய . . . .
தகவனும் பொன் நாடனும் தனித்தெழுந்து சமர் செய்வார். 56

சுரர்பதி வருண பாணம் தொடுத்தனன் அசுரன் துள்ளி
எரிசரம் தொடுத்துச் சீற்றம் தணிந்தனன் இமையோர் வேந்தன்
பரிதிஅத் திரம்கொண் டெய்தான் பதிகனும் சசிவிட் டார்த்தான்
அரிஅரிக் கணையை விட்டான் அவுணன்சிம் புள்ளால் அட்டான் 57

நாகர்கோன் சூறை ஏவ நாகமாப் படைவிட் டார்த்து
வேகம் தகற்றக் கள்வன் வெள்ளைவா ரணத்தி னானும்
மோகமாப் படைவிட் டார்த்தான் தகுவனும் முயன்று ஞான
வாகைவா ளியினால் எய்தான் வான்உளோர் யாரும் அஞ்ச. 58

இவ்வகைத் தேவ பாணம் எய்தபின் எழுவி னாலே
மைவண அசுரன் வென்றான் வாசவன் புறகிட் டோடத்
தெவ்வினை அட்டோன் வாகை சூடினான் செழுங்கோ டேங்க
கைவினை அதனால் தேவர் பொருள்எலாம் கவர்ந்தான் மன்னோ. 59

வானமும் திசையும் பாரும் மற்றதில் உள்ள வான
தானமா நிரையும் பாய்மாத் தரங்கமும் தடந்தேர் யாவும்
கானமும் மணியும் பொன்னும் காமதே னுவும்கால் கின்ற
மேனிதி களும்கைக் கொண்டான் வேதியன் வரத்தினாலே. 60

புரந்தரா தியர்ம றைந்தோர் எங்ஙனம் புகுவோம் என்ன
இரங்கிட அகப்பட் டோரைச் சிறையினில் இட்டான் அன்ன
அரம்பையர் இடுக்கண் எய்த ஆண்டனன் அசுரன் இன்னல்
கரந்திட உருவம் மாறி மகபதி கருது கின்றான் 61

புந்தியில் எண்ணி இன்ன புதழ்தரு மதிஎன் றோர்ந்தே
இந்திரன் தேவ ரோடும் சத்திய லோகத் தெய்திக்
கந்தமா மலரில் மேய கடவுளைப் பணிந்து நின்று
வந்தவே தனைகள் தீர முறையிட்டார் வணங்கி னாரே. 62

கமலமா மலரில் மேய கடவுளே கருணை மூர்த்தி
தமலம்நீங் கியவே தாவே சகலபல் லுயிரை ஈன்ற
அமலனே வாக்கின் செல்விக் கன்பனே அயனே என்றென்
றிமையவர் முதலோர் போற்ற இவர்தமை நோக்கி வேதன். 63

பகருவான் முகம்பு லர்ந்து பருவர லுடன்இங் கெய்தும்
தகமைஏ துரையும் என்னச் சாற்றுவார் விருத்ரன் என்னும்
இகல்புரி அசுரன் செய்த இடுக்கணால் அவதி எய்திப்
புகல்இலா துனைஅ டைந்தோம் புரந்திட வேண்டும் என்றார். 64

செங்கையால் அமைத்து நீவிர் அஞ்செலீர் என்றான் தேவர்
தங்குறை புகல்வார் எங்கள் பொருள்எலாம் தகுவர் கொண்டார்
பொங்கிய பகையைப் போக்கிப் பொன்நகர் எங்கட் கீவாய்
பங்கய முதலே என்று பரவினார் பணிந்து நின்றார். 65

விண்ணவன் தன்னை நோக்கி வேதநான் முகத்தோன் கூறும்
எண்ணிலா தவங்கள் முன்னம் இயற்றினோன் எச்ய யோனிக்
கண்ணிகழ் பெயரோன் ஓங்கு காயத்தால் விருத்ர காலன்
தண்ணளி இல்லான் மேலாம் காசிபன் வேள்வி தந்தோன். 66

வன்னியை நிகர்வோன் சுக்ரன் வழங்கிடும் வரங்கள் பெற்றோன்
உன்னரும் திறலோன் தன்னை வெல்லுதற் குறுதி ஒன்று
மன்னிய யாகம் தன்னில் சுரபேத மந்தி ரத்தால்
துன்னினோன் அதனால் அற்ப வாழ்வினோன் சுகுணம் இல்லோன். 67

